


நடிகர் ரகுவரன் இப்போது தீவிரமான சாய்பாபா பக்தராக மாறிவிட்டார். அவருடைய அனுபவம்:



# "மறுஜன்மம் எடுத்தேன்!"

— ரகுவரன்



'ஏழாவது மனிதன்'ல நடிச்சப்போ, எனக்குப் பதினெட்டு வயசுதான். அதற்குப் பிறகு ஸ்ரீதர் சார் படம், ஆர்.சி. சக்தி படம்னு ரொம்ப பிஸியாயிட்டேன். கை நிறைய பணம். திடீர் புகழ்... வழி காட்டறதுக்கு யாருமில்லை. இளம் வயசு வேறே... சுலபமா சறுக்கிட்டேன். நாலே வருஷத்துல மோசமான நிலைமைக்குப் போயிட்டேன். மார்க்கெட் அவுட். உடம்பு வேறே ரொம்ப க்ரிடிக்கலா ஆயிடுச்சு... டாக்டர்ஸ் எல்லாம் கைவிட்டுட்டாங்க. ஆஸ்பத்திரி பில்லுக்குப் பணம் கட்ட காசு இல்ல. ரொம்ப விரக்தியா படுத்திருந்தேன். வாய் விட்டு அழணும்னு நினைக்கிறேன். ஆனா அதுக்குக் கூட திராணி இல்லை.

அப்போ அவர் உள்ளே வர்றார்! புட்டபர்த்தி சாய்பாபா!

"அட! இவர் மாஜிக் எல்லாம் பண்ற சாய்பாபா ஆச்சே! இவர் ஏன் இங்க வர்றாரு?''ன்னு நான் நினைக்கிறேன். அதுக்குள்ள அவர் என்னை இன்னும் நெருங்கி வந்துட்டாரு...

''கவலைப்படாதே! நான் இருக்கேன்... நீ ஒண்ணும் அநாதைக் இடையாது... தைரியமா இரு''ன்னு சொல்லி என் தலையை வாஞ்சையா தடவிக் கொடுக்கறார்.

எனக்கு இது கனவா இல்லை, நிஜமா

நடக்குதான்னுகூட தெரியலை.

அதற்குப் பிறகு நடந்த நிகழ்ச்சிகள் எல்லாம் எனக்குத் தூக்கத்துல நடந்தது போலதான் இருக்கு.

அடுத்த அறுபதாவது மணி நேரத்தில் நான் புட்டபர்த்தில இருக்கேன்... ஆஸ்பத்திரியில படுத்த படுக்கையா இருந்த நான் எப்படி அங்கே போனேன்? எதுக்காக போனேன்? யார் என்னை அழைச்சது?... சுத்தமா ஞாபகம் இல்லை. ஞாபக வலையில் துழாவி துழாவிப் பார்த்துட்டேன். எதுவும் பிடிபடலை.

பஸ்ஸை விட்டு இறங்கி நடந்தேன். பிரார்த்தனை மண்டபம் நிரம்பி வழிகிறது. நான் இரும்பு கேட்டுக்கும் வெளியே நிற்கிறேன், அதுவும் கூட்டத்தின் கடைசி ஆளாக!

பாபா வருகிறார்... கூட்டத்தைப் பார்க்கிறார்... வெகு தூரத்தில் நிற்கும் என்னை வரச் சொல்லி சைகை செய்கிறார்.

'யாரையோ அழைக்கிறார்' என்று நான் சும்மா இருந்தேன்... அருகில் இருந்த சேவாதள்ஸ் "உங்களைத்தான் பாபா கூப்பிடுகிறார்" என்றார்கள். எனக்கு ஒரே அதிசயம்!

அத்தனை ஜனமும் ஒதுங்கி எனக்கு வழி விட, நான் பாபாவுக்கு மிக அருகில் நிற்கிறேன்.

அவர் என்னைக் கனிவோடு தொட்டு, முன் வரிசையில் உட்கார வைக்கிறார்.

அந்தத் தொடுகை! அந்தச் சிலிர்ப்பு! ஆயிரம் நாக்கு இருந்தாலும் என்னால் அதை வர்ணிக்க முடியாது... அப்படியே அவருடைய காலடியில் அழுதபடியே உட்கார்ந்து விட்டேன்.

பிரசாந்



"இருந்தாலும் அந்த ஆராய்ச்சியாளருக்கு இவ்வளவு திமிர் இருக்கக் கூடாது..."

"ஏன் டாக்டர்...?"

"ஆவிகள் பற்றி ஆராய்ச்சி பண்ணப் போறாராம். ஆபரேஷன் தியேட்டரை ஒருநாள் வாடகைக்குத் தர முடியுமான்னு கேக்கறார்..."

– சூரம்பட்டி சத்யா முருகவேல்

நியிலேயே தங்கினேன். அந்த இடத்தை விட்டுப் போகும் எண்ணமே இல்லை.

மறுநாளும் என்னைப் பார்த்தார்.

"நிறைய வேலைகள் இருக்கே... போ...! பண்ணு... நான் இருக்கேன்...!" – பாசத்தோடு விரட்டினார்.

நான் சென்னைக்குப் புறப்பட்டேன். வரும் வழியெல்லாம் பாபாவின் ஸ்மரணை தான்.

மறுஜன்மம் எடுத்தவனாக ஊர் வந்து சேர்ந்தேன். நிறையப் படங்கள் கிடைத்தன. நான்கு மொழிகளிலும் பிஸியாகிவிட்டேன். ரோகிணி கிடைத்தார். சாய்ரிஷி பிறந்தான். அன்பான குடும்பம் அமைந்தது. இப்போது என்னிடம் குழப்பமில்லை... 'விஷன்' என்பார்களே அது என்ன என்று தெளிவாகப் புரிந்துவிட்டது.

'சர்வீஸ் டு ஹியுமானிடி, சர்வீஸ் டு காட்' என்ற சிந்தனையில் நம்பிக்கை பிறந்தது.

நாலு பேருக்கு நல்லது செய்ய செய்ய, கடவுள் நம்மை நெருங்கி வருவார் என்பது புரிந்தது. பிரார்த்தனையின் பலம் புரிந்தது. இதைவிட எனக்கு என்ன தேவை?"

கேட்டுவிட்டு மௌனத்தில் ஆழ்ந்தார் ரகுவரன்.

"பாபா, உங்களுக்கு மோதிரம், லிங்கம், பூ... இப்படி ஏதாவது வரவழைச்சுக் கொடுத்திருக்காரா?"

"இல்லை... அதெல்லாம் எனக்குத் தேவையே இல்லை. ஏதாவது மனசஞ்சலம்னா, 'டியர் பாபா'ன்னு லெட்டர் எழுதுவேன். கடிதம் எழுதி முடிப்பதற்குள்ளேயே பிரச்னை தீர்ந்துடும். 'பாபா, எனக்கு உங்களைப் பார்க்கணும்'னு நினைச்சுப்பேன்... மறுநாள் அவர் தரிசனம் கிடைச்சுடும்.. எவ்வளவு பெரிய கூட்டத்துலயும் என்னை அடையாளம் கண்டுபிடிச்சிடுவார்.... "வந்துட்டியா?"ன்னு ஒரு சைகை... "நல்லா இரு"ன்னு ஆசிர்வாதம். அதுலேயே பரம திருப்தி.

"பாபாதான் உங்ககிட்டே ரொம்ப நெருக்கமா இருக்காரே... அவர்கூட ஃபோட்டோ எடுத்துக்கோங்க... ஒரு இன்டர்வ்யூ வேணும்னு கேளுங்கன்னு கூட இருக்கிறவங்க தூண்டி விடுவாங்க... எனக்கு அதெல்லாம் கேட்கணும்னே தோணாது... ஏன்னா, எனக்கும் அவருக்கும் இடையே இருக்கிற காஸ்மிக் கனெக்ஷன் இருக்கே, அது ஜன்ம ஜன்மமா தொட்டுத் தொடரும்

விஷயம்...'' என்கிறார் நம்பிக்கையாக.

சாய்பஜனை, நாமாவெளி பாடுவது இதெல்லாம்கூட ரகுவரன் செய்வதில்லை யாம்.

''இந்த உலகமே நீங்கதான்... நான் உங்கள் பிள்ளை. என்னை சரியான பாதையில் நடத் துங்கள். மற்றவர்களுக்கு உதவ எனக்கு உத வுங்கள் - இந்தச் சின்ன பிரார்த்தனை மட் டுமே செய்கிறேன். சாய் சமாஜம் செய்யும் ஆன்மீகப் பணிகளில் கலந்து கொள்கிறேன். முடிஞ்ச உதவி பண்ணுகிறேன்... தட்ஸ் ஆல்.''



''உங்கள் மனைவியும் சாய் பக்தையாக மாறியது எப்படி?'' என்று கேட்டபோது, ''ரோகிணியிடமே கேட்டுக்கோங்க, சாய் ராம்'' என்று சொல்லி அமைதியாக உட் கார்ந்துகொண்டார்.

''இவரைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு முன்னாடி சாய்பாபா பற்றி அதிகமாய்த் தெரியாது... ஏதோ சாமியார் என்ற அளவில் தான் தெரிந்து வைத்திருந்தேன். ரஞ்சிதா, ரேவதி, கமீலாநாசர், நான், நான்கு பேரும் சேர்ந்து 'சுவாபிமான்' என்ற சமூகசேவை அமைப்பைத் தொடங்கி நல்ல விஷயங்கள் செஞ்சுக்கிட்டிருந்தோம். அப்பதான் இவர், 'நீங்க செய்யற அதே சர்வீஸைதான் பாபா, பெரிய அளவுல செய்யறாரு... அதைப் பார்த்தா உனக்கு இன்ஸ்பிரேஷனா இருக்கும்னு' சொல்லி புட்டபர்த்திக்கு அழைச்சுட்டுப் போனார். அங்கே போன பிறகுதான், கல்வி, மருத்துவம், ஆன்மீகம்னு பல துறைகளில் அவங்க தொண்டு செய்யறது தெரிஞ்சது. அன்றைக்கு பாபா மீது ரொம்ப மரியாதை ஏற்பட்டது.

''அப்புறம், எனக்கு இரண்டு முறை கருச்சிதைவு ஏற்பட்டு, ரொம்ப மன வேதனையுடன் இருந்தபோது, பாபாவின் நாமத்துக்கு உள்ள மகிமை தெரிந்தது. சாய் ரிஷி கர்ப்பத்தில் இருந்தபோது பாபாவை ஒருகணம் கூட நினைக்கத் தவறியதில்லை. அவர் எப்போதும் என் கூடவே இருப்பது போல தைரியம் பிறந்தது... அந்த அனு பவத்துக்குப் பிறகு நானே தீவிர பக்தையாகி விட்டேன்'' என்று ரோகிணி உணர்ச்சி கரமாய் முடித்தார்.

அப்போது ரோகிணியின் மடியில் இருந்த அவரது இரண்டரை வயது மகன் சாய்ரிஷி, பாபாவின் படத்தைக் காட்டி, ''பாபா'' என்று மழலையில் சொல்லி, அவரைப் போலவே இரண்டு கைகளையும் உயர்த்தி ஆசீர்வாதம் செய்ய... ரகுவரன், ரோகிணி முகத்தில்தான் எத்தனை பர வசம்?

— அனுராதா

"ஸ்வாமி! உங்களது பிறப்பு பிரசவமா? பிரவேசமா?" பக்தர்கள் சூழ பகவான் சத்யசாயிபாபா இனிமையாய் உரையாடிக் கொண்டிருந்தபோது, வேத விற்பன்னர் ஒருவர் தொடுத்த கேள்வி இது. எதிர்பாராத இந்தக் கேள்வியால் அனைவரும் திகைத்தபோது, பகவான் பாபா மயக்கும் புன்னகையுடன் தம்முன் அமர்ந்திருந்த தமது தாய் ஈஸ்வரம்மாவைப் பார்த்து,

"உன் மாமியார் உன்னை எச்சரித்ததையும், கிணற்றில் நீர் இறைக்கும்போது உனக்கு நேர்ந்த அனுபவத்தையும் சொல்" என்று பணித்தார்.

பகவான் சத்ய நாராயணன் தன் கனவில் வந்ததால் "உனக்கு எது நேர்ந்தாலும் பயப்படக்கூடாது" என்று மாமியார் சொன்னதையும் அன்றைய தினமே காலையில் கிணற்றில் நீர் இறைக்கும் போது நீல நிற ஒளிப் பந்து ஒன்று தன்னுள் கலந்ததையும்



# பிரசவமா? பிரவேசமா?

தான் மூர்ச்சையடைந்ததையும் விவரித்தாள்.

பரந்தாமன் நாராயணன் கருணைத் திருவுளம் கொண்டு சத்ய சாயி பாபாவாக மனித உருவெடுத்து அவதரிக்க தேர்ந்தெடுத்த தாய் ஈஸ்வரம்மா. சாட்சாத் ஈஸ்வரனுக்கே அன்னையாகப் போகிறாள் என்பதை அறிந்தே, கொண்டமராஜு (ஸ்வாமியின் தாத்தா) அவளுக்கு அந்தப் பெயரைச் சூட்டினார்.

எளிமையும், ஆழ்ந்த தெய்வ நம்பிக்கையும், இரக்கமும் இனிமையான சுபாவமும் கொண்ட ஈஸ்வரம்மா படித்தவரல்ல. எளிமையான கிராமத்துப் பெண்ணான அவர் தன் எட்டாவது மகன் பாரெல்லாம் போற்றும் ஒரு அவதார புருஷன் என்பதை உணரவில்லை. மற்ற தாய்மார்களைப் போல் தன் மகனைத் தன்னுடன் வைத்துக் கொண்டு சீராட்டி மகிழ வேண்டும். அவனுக்குப் பிடித்த பதார்த்தங்களை அளிக்க வேண்டும். தன் பாதுகாப்பில் பத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணினாள். மகனின் தெய்வீக ஆற்றலைக் கண்டு ஆச்சரியமும் பெருமையும் அடைந்தாலும், இது எதில் கொண்டு விடுமோ? தன் மகனுக்கு என்ன ஆபத்து நேரிடுமோ என்று அஞ்சித் தவிப்பார். காண் போரைக் கவர்ந்திழுக்கும் தன்



மகனின் மாயப்புன்னகையில் மற்றவர்கள் மயங்கி நிற்கும்போது தன் கண்மணிக்குக் கண்பட்டு விடக்கூடாதே என்று திருஷ்டி கழிக்கும் அவர் தாயுள்ளம்.

இறப்பதற்கு சில நாட்களுக்கு முன் "பெத்த பொட்டு" என்றழைக்கப்படும் பக்தையிடம் (பெத்த பொட்டு, ஷீர்டி சாயிபாபாவின் காலத்தில் அவரை வணங்கி வழிபட்டு பின் ஸ்வாமியிடம் வந்தவர்), "நான் ஒரு ரகசியம் சொல்கிறேன்.. யாரிடமும் சொல்லாதே.. நம் ஸ்வாமி கடவுள் தான் ..." என்றாராம். அதற்கு அவர் சிரித்துக் கொண்டே நீங்கள் இப்போதாவது இதை உணர்ந்தீர்களே... சந்தோஷம்... எப்படி உணர முடிந்தது?" என்று கேட்டாராம்.

"காய்ச்சலில் முடியாமல் தவித்தபோது பகவான்பாபா என்னிடம் வந்து எப்படி இருக்கிறது என்று கேட்டார். தலைநிமிர்ந்த போது தலையில் கிரீடமும் கையில் கோதண்டமும், உதடுகளில் மயக்கும் முறுவலும் பூண்ட இராமபிரானே தெரிந்தார். எழுந்திருக்க முயன்றேன் முடியவில்லை. பின் ஸ்வாமிதான் தெரிந்தார்." என்றாராம்.

இந்த அனுபவத்திற்குச் சில நாட்களுக்குப் பிறகு இறக்கும் தருவாயிலும் ஸ்வாமியின் பெயரை உச்சரித்தபடியே ஜோதியுள் கலந்தார்.

ஆர்ஜால்ட் ஹீல்மேன் என்ற வெளிநாட்டு பக்தரிடம், "என் மகன் சரியாகத் தூங்குவதில்லை. சாப்பிடுவதில்லை. அவனுக்குத் தனிமையும் ஓய்வும் கொடுக்காமல் பக்தர்கள் சூழ்ந்து கொள்கிறார்கள். என் சமையலென்றால் அவனுக்கு இஷ்டம்... மற்றவர்கள் சமையல் பிடிக்காமல் என் மகன் சரியாக உண்பதில்லை." என்று அந்தத் தாயுள்ளம் வருந்திய போது பாபாவுக்கு 44 வயது.

குழந்தைகளிடம் அளவு கடந்த பிரியம் கொண்ட ஈஸ்வரம்மாவின் விருப்பப்படியே பகவான் பாபா பள்ளிக் கூடம் நிறுவினார். இன்று இலவசக் கல்வியளிக்கும் சத்திய சாய் பல்கலைக்கழகம், உலகத்திற்கே முன்னுதாரணமாய்த் திகழ்கிறது. மருத்துவ வசதிகளில்லாத குக்கிராமமான புட்டபர்த்திக்கு மருத்துவமனை வேண்டும் என்று தன் தாய் கோரியதற்கிணங்க பகவான் பாபா ஆஸ்பத்திரி கட்டினார். இன்று எல்லோருக்கும் இலவச மருத்துவமளிக்கும் தரம் வாய்ந்த சத்யசாய் சூப்பர் ஸ்பெஷாலிட்டி மருத்துவமனை பகவானின் கருணையைப் பறை சாற்றுகிறது. குடிநீர் வசதி வேண்டும் என்ற ஈஸ்வரம்மாவின் மூன்றாவது ஆசையையும் நிறைவேற்றி வைத்தார் பகவான் பாபா. வறண்ட அனந்தப்பூர் ஜில்லா முழுவதும் 300 கோடி செலவில் இன்று குடிநீர் கிடைக்க வசதி செய்திருக்கிறார்.

"எனது வாழ்க்கையே உங்களுக்கு நான் தரும் செய்தி" என்று கூறும் அன்பின் உருவமான ஸ்வாமி தன் தாயின் ஆசைப்படியே அறிவுக்கு கல்வி, இதயத்துக்கு மருத்துவம், உடலுக்கு நீர் ஆகிய மூன்றும் இலவசமாகக் கிடைக்கச் செய்தார்.

- ஜெயா சேகர்



பாபாவின் அப்பா பெத்தவேங்கமராஜு, அம்மா ஈஸ்வரம்மா. அம்மா 1972ல் மறைந்தார். அப்பா மரணம் 1990ல். பிரசாந்தி நிலையத்துக்கு எதிரில் உள்ள நந்தவனத்தில் பாபாவின் பெற்றோர் சமாதி இருக்கிறது. மெழுகுவர்த்தி, ஊதுபத்தி மற்றும் தீபம் கொண்டு மனத்துக்கு சாந்தி தரும் விதமாய் அலங்கரிக்கப்படுகிறது இந்த சமாதி. ஒவ்வொரு ஆண்டும் தமது பிறந்தநாளன்று பாபா தம் பெற்றோர் சமாதிக்கு வந்து. வணங்கி ஆசி பெறுவது வழக்கம்!

# ரூ.510/- விலை மதிப்புள்ள இங்கிலீஷ் கோர்ஸ் ரூ.150/- மட்டுமே!

3 டிவிஷன்களின் பேக்கேஜ்

| டிவிஷன்-1 | டிவிஷன்-2 | டிவிஷன்-3 | ரூ. |
|---|---|---|---|
| ரூ. 130/- | ரூ. 170/- | ரூ. 210/- | 510/- |

**டிவிஷன் -1** ABCD முதற்கொண்டு இங்கிலீஷில் படிக்கவும் எழுதவும் கற்பித்து நல்லொழுகுவதற்குத் தேவையான நிலையில் ஸ்டான்டர்டு இங்கிலீஷ் கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின் ஃபீஸ் ரூ. 130/-

**டிவிஷன் -2** பிழைகள் இன்றி ஆங்கிலம் எழுத தேவையான இங்கிலீஷ் இலக்கணம் முறையாக, கலை நுணுக்கங்களாக, எளிமையாக கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின் ஃபீஸ் ரூ. 170/-

**டிவிஷன் -3** வெகு சரளமாக எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் தடுமாறாமல், பிழைகளின்றி, மிகவும் சரளமாக பேச கற்பிக்கப்படுகிறது. இந்த கோர்ஸின் ஃபீஸ் ரூ. 210/-

## 12 மொழிகளின் கோர்ஸ்கள்

(12 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. ஹிந்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 2. தெலுங்கு ஸ்பீக்கிங் கோர்ஸ் 3. கன்னடம் ஸ்பீக்கிங் கோர்ஸ் 4. மலையாளம் ஸ்பீக்கிங் கோர்ஸ் 5. பெங்காலி ஸ்பீக்கிங் கோர்ஸ் 6. மராத்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 7. பஞ்சாபி ஸ்பீக்கிங் கோர்ஸ் 8. குஜராத்தி ஸ்பீக்கிங் கோர்ஸ் 9. அரபிக் ஸ்பீக்கிங் கோர்ஸ் 10. உருது ஸ்பீக்கிங் கோர்ஸ் 11. ஒரியா ஸ்பீக்கிங் கோர்ஸ் 12. சான்ஸ்கிரிட் ஸ்பீக்கிங் கோர்ஸ்

## 8 ஃபென்டாஸ்டிக் கிஃப்ட் கோர்ஸ்கள்

(8 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. ஈஸி மனி எர்னிங் கோர்ஸ் (சுலபமாக பணம் சம்பாதித்தல்)
2. சீக்ரெட் மேஜிக் கோர்ஸ் (திகைக்கும் மேஜிக் செய்வது)
3. ஜென்டில் ஸ்மார்ட்னெஸ் கோர்ஸ் (ஆண்களின் கவர்ச்சியை அதிகரிக்க)
4. பியூட்டி ட்ரீட்மென்ட் கோர்ஸ் (அழகைத் தோற்றமளிப்பது எப்படி)
5. சக்ஸஸ்புல் ஸ்மார்ட்னெஸ் கோர்ஸ் ([illegible])
6. யோகா கோர்ஸ் (வெவ்வேறு யோகாசனங்களின் விவரங்கள்)
7. "பாமிஸ்டரி" கோர்ஸ் (உங்களது கைரேகை கூறும் எதிர்காலம்)
8. டீச்சர் ட்ரீட்மென்ட் கோர்ஸ் ([illegible])

## 4 கோர்ஸ் கிஃப்ட் புத்தகங்கள்

(4 இன் 1 பாக்கெட் சைசில்) ஃப்ரீ

1. **வர்டு பவர்** (ஆங்கில சொற்களின் அற்புத சக்தி)
2. **லெட்டர் ரைட்டிங் பிராக்டீஸ்** (இங்கிலீஷில் கடிதம் எழுதும் முறை)
3. **அப்ரிவேஷன்ஸ் டிக்ஷனரி** (டெக்னிகல் சொற்களின் டிக்ஷனரி)
4. **வெர்ப்ஸ் டிக்ஷனரி** (வினை சொற்கள்- அதன் ரூபங்கள்)

## புத்தாண்டுப்பரிசு ஒரு டைரி இலவசம்! + 24 மினி கோர்ஸ்கள்




**இக்கூப்பனை பூர்த்தி செய்து உடனே அனுப்பவும்**

**STUDENTS' ENGLISH INSTITUTE** 1321

15/1, Parthasarathipuram Extn. T. Nagar, Chennai - 600 017.

எனக்கு டிவிஷன் 1, டிவிஷன் 2, டிவிஷன் 3, (மொத்தம் 3 டிவிஷன்கள்) தற்பொழுதைய ரூ. 510/- விலை மதிப்புள்ள இங்கிலீஷ் கோர்ஸ் இலவச பாக்கெட்சைஸ் புத்தகங்கள் அனைத்தும் (8+12+4) மற்றும், புது வருட டைரியையும், அனைத்து புத்தகங்களையும் சேர்த்துரூ. 150/- க்கான வி.பி.பி அனுப்பவும். போஸ்ட்மேனிடம் பணம் தந்து எனது பேக்கேஜை பெற்றுக்கொள்கிறேன்.

Name ........................................

Address ........................................

........................................

........................ Pin Code ☐☐☐☐☐☐

**வி**டுதலைக்கு முன்பு தேசிய அளவில் காங்கிரஸ் கட்சி மட்டுமே இருந்தது. அதன் பின் காங்கிரஸில் இருந்து பிரிந்த தலைவர்கள் தனி இயக்கங்கள் கண்டனர். தமிழகத்தைப் பொறுத்தவரை தி.மு.கவிலிருந்து அ.இ.அ.தி.மு.க., அதைத் தொடர்ந்து இன்று பல தலைவர்களின் தலைமையில் பல இயக்கங்கள். ஜனநாயக நாட்டில் மக்களின் மாறிவரும் எண்ண ஓட்டத்தின் அடிப்படையிலும், காலத்தின் கட்டாயம் காரணமாகவும், புதுப் புதுக் கட்சிகள் தோன்றியது தவிர்க்க முடியாதது. குறிப்பாகச் சொல்லப் போனால், பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட, சிறுபான்மை மக்களின், நியாயமான உரிமைகள், விருப்பங்கள், கானல் நீராகும்போது,

# "எல்லோரும்



அவர்களுடைய நலன்களுக்குப் போராட புது இயக்கங்கள் வந்தே தீரும். அந்த அடிப்படையில் பிறந்ததுதான் மக்கள் தமிழ் தேசம்!

மக்கள் தமிழ் தேசம் ஒரு சமுதாயத்துக்கு மட்டும் சொந்தமானதல்ல; இங்கு ஜாதி உணர்வுகளுக்கு இடம் இல்லை. பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட, சிறுபான்மை மக்கள் நலன்களை மட்டுமல்லாமல் சமுதாய ரீதியில் உயர்ந்த வகுப்பினராக இருந்தாலும் பொருளாதார ரீதியாகப் பிற்படுத்தப்பட்டிருப்பவர்களுக்குக் கல்வி, வேலை வாய்ப்பில் இட ஒதுக்கீடு கேட்டு மக்கள் தமிழ் தேசம் போராடும். 'எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும்' என்பதுதான் எங்களது கொள்கைகளின் சுருக்கம். பல கட்சிகளில் அநியாயமான பல காரணங்களுக்காக ஒதுக்கித் தள்ளப்பட்டவர்கள் அணிவகுக்கும் பாசறையாக இருக்கிறது மக்கள் தமிழ்தேசம்.

எங்களை ஜாதிக்கட்சி என்று சொல்பவர்கள் கண்ணாடி அறையிலிருந்து கல் எறிபவர்கள். சமூகம் என்றால் பல ஜாதிகளைக் கொண்டது. அவர்களது நலன்களுக்குப் போராடுவதாகத்தான் கட்சிகள் சொல்கின்றன. அந்த அடிப்படையில் நாங்களும் தேர்தல் கமிஷனில் பதிவு

# “எல்லாமும் பெறவேண்டும்!”

செய்த ஒரு கட்சியாக இயங்குகிறோம். எங்களை ஜாதிக் கட்சி என்று ஏன் முத்திரை குத்துகிறார்கள் என்று தெரியவில்லை. கட்சி துவங்கிய 75 நாட்களில் 25 மாவட்டங்களில் மாநாடுகள் நடத்திவிட்டோம். எங்கள் மாநாடுகளில் மக்கள் திரளாகக் கூடுகிறார்கள். அந்தக் கூட்டத்தைப் பார்த்து மிரளும் அரசியல் தலைவர்கள்தான் எங்களை ஜாதிக்கட்சி என்று சொல்கிறார்கள். எங்களைக் குற்றம் சாட்டும் அரசியல் தலைவர்களைக் கேட்கிறேன்...

நீங்கள் மட்டும் உங்கள் ஜாதியினர் எங்கு அதிகமாக இருக்கிறார்களோ அந்தத் தொகுதியைத் தேர்ந்தெடுத்து அங்கே நிற்பதில்லையா? இது போன்ற போக்கு ஜாதி உணர்வுக்கு அப்பாற்பட்டதா... நெஞ்சில் கைவைத்துச் சொல்லுங்கள். தி.மு.கவைக் கூட முதலில் முதலியார் கட்சி என்று சொன்னார்கள். பா.ம.கவை வன்னியர் கட்சி என்றார்கள். இந்தக் கட்சிகள் எல்லோர் நலனுக்கும்தானே பாடுபட்டுக் கொண்டிருக்கின்றன.

தேர்தலுக்குப் பின் ஜாதி இயக்கங்கள் அழிந்து போகும் என்று சிலர் சொல்கிறார்கள். எங்களுக்கு அது பற்றிக் கவலையில்லை. ஏனென்றால் நாங்கள் அரசியல் கட்சி நடத்துகிறோம். பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட, சிறுபான்மை மக்களுக்காகப் போராடும் எங்களை, அந்த மக்கள் ஒருபோதும் கைவிட மாட்டார்கள். தமிழ்நாட்டின் வடக்கிலும், தெற்கிலும் 90 தொகுதிகளில் தொகுதிக்கு 20000 முதல் 30000 வரை எங்கள் ஆதரவாளர்கள் இருக்கிறார்கள். இது தவிர, 94 தொகுதிகளில் 15000 முதல் 20000 வரை எங்களால் வோட்டு வாங்க முடியும். கடந்த பாராளுமன்றத் தேர்தல் முடிவுகளைப் பார்த்தால் ஒரு உண்மை பளிச்சென்று விளங்கும். பல தொகுதிகளில் மிகச் சிறு வித்தியாசத்தில் தி.மு.க மற்றும் அ.இ.அ.தி.மு.க கூட்டணி வேட்பாளர்கள் தோல்வி அடைந்திருக்கிறார்கள். எனவே எங்களுக்கு ஒவ்வொரு தொகுதியிலும் இருக்கும் கணிசமான ஆதரவு காரணமாக எங்களைப் பெரிய கட்சிகள் அலட்சியப்படுத்த முடியாது..



ஜாதிகளைப் பயன்படுத்தி, வன்முறையைத் தூண்டுவதை ம.த.தே கடுமையாக எதிர்க்கும். சட்டமன்றத் தேர்தல் வரும் இந்தச் சூழலில் மக்கள் மாறுதல் வேண்டுமென்று எதிர்பார்ப்பது யதார்த்தம். ஒரு சரியான தலைமையின் கீழ் வலிமையான ஒரு புதிய அணி உருவாகுமேயானால் அதில் பங்கு கொண்டு தேர்தலைச் சந்திக்க ம.த.தே தயாராக இருக்கிறது. ஏற்கெனவே இருக்கும் இரண்டு அணிகளில் கேட்ட சீட்டுகள் கிடைக்காத காரணத்தால், புதிய அணி உருவாவதைவிட, சில அடிப்படை அம்சங்களோடு பொதுவான நோக்கில்,

**கண்ணப்பன்**

தலைவர், மக்கள் தமிழ் தேசம் கட்சி




## சிவாலயம் தெரு!

பிரசாந்தி நிலையத்திலிருந்து அரை கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது புட்டபர்த்தி கிராமம். அங்கே உள்ள தெருக்களில் ஒன்று கர்ணம் தெரு. அங்கே 2/320 என்ற எண் கொண்ட வீட்டில்தான் பாபா பிறந்தார். 1973 பாபா விருப்பப்படி அந்த வீடு இருந்த இடத்தில் ஒரு சிவன் கோவில் கட்டப்பட்டது. பளிங்குக் கல்லில் ஆன பரமசிவன் உருவச்சிலை. அங்குள்ள அர்ச்சகர், பாபா தம் வாழ்வில் ஆற்றிய அற்புதங்களை மணிக் கணக்கில் விவரிக்கிறார்.



இப்போது அந்தத் தெரு 'சிவாலயம் தெரு' என்று குறிப்பிடப்படுகிறது. இந்தக் கோவிலுக்கு மூன்று வீடு தள்ளி இருக்கிற சாதாரணமான வீட்டில் வசித்து வருபவர் பாபாவின் உடன்பிறந்த சகோதரர்.

## அணில் சேவை!

புட்டபர்த்தி பஸ் நிலையத்தில் மாணவர் குழு ஒன்று டிராலி சகிதம் காத்துக் கொண்டிருக்கிறது நாள் முழுவதும். பஸ்ஸில் வந்து இறங்கும் பக்தர்கள், குறிப்பாக வயதானவர்களும், உடல் ஊனமுற்றவர்களும், கொண்டு வரும் லக்கேஜ்களை எடுத்து டிராலிகளில் வைத்து, கூடவே தள்ளிக்கொண்டு, அவரவர்க்கு தங்க ஒதுக்கப்படும் இடம் வரை கொண்டு சென்று உதவுகிறார்கள். 'ராமருக்கு அணில் செய்ததைவிட எங்கள் சேவை இன்னும் சிறிது'' என்கிறார்கள் இந்த மாணவர்கள்.



— எம்.

படங்கள்: யோகா

குறைந்தபட்ச செயல் திட்டத்தோடு ஒரு அணி உருவாக வேண்டும். இப்படியொரு வலிமையான மூன்றாவது அல்லது புதிய அணி உருவாகாத பட்சத்தில், ஏற்கெனவே இருக்கும் இரு அணிகளில் ஏதேனும் ஒன்றில் இணைந்து செயல்படவும் ம.த.தே தயாராக இருக்கிறது. சில சீட்டுகளுக்காகக் கொள்கைகளைக் குழி தோண்டிப் புதைக்க மாட்டோம். எங்கள் பார்வையில் அடுத்து தமிழகத்தில் கூட்டணி ஆட்சிதான். தனிக்கட்சி ஆட்சி இனி இருக்காது. எனவே எங்களுக்கும் ஆட்சி, அதிகாரத்தில் பங்கு தர வேண்டும். ஒரு கட்சி ஆட்சியில், மக்களது பிரச்னைகளை எடுத்துச் சொல்ல கட்டுப்பாடுகள் காரணமாக அந்தக் கட்சித் தலைவர்கள் தயங்குகிறார்கள். இப்போது தேசிய ஜனநாயக முன்னணி ஆட்சியில், பா.ஜ.க தலைவர்கள் வாய்மூடி இருக்கிறார்கள். ஆனால் மம்தா போன்றவர்கள் பெட்ரோலிய பொருட்கள் விலை உயர்வைக் குறைக்க வேண்டும் என்று தைரியமாகப் பேசுகிறார்கள். எனவே கூட்டணி ஆட்சி இருந்தால் ஒருவருக்கொருவர் ஒரு தட்டிக் கேட்க, அதே சமயம் பொதுவான நலன்களும் எடுத்துப் பேசப்படும் என்று மக்கள் நினைக்கிறார்கள்.

People's Republic of China என்று அழைப்பார்கள். அது போலத்தான் மொழிப் பற்றையும் நாட்டுப் பற்றையும் வெளிப்படுத்தும் வண்ணம் மக்கள் தமிழ்தேசம் என்று கட்சிக்குப் பெயர் வைத்திருக்கிறோம். இதன் தலைவர் பொறுப்பு புதிய உற்சாகத்தைத் தருவது மட்டுமல்லாமல், பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட, சிறுபான்மை மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் முன்னால் நிறுத்தியிருக்கிறது.

படம்: ராஜன்



# தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

**டெபாசிட் திரட்டும் முகாம்**

உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்

| வேலூர் | காஞ்சிபுரம் |
|---|---|
| நாள் : 23, 24 நவம்பர் 2000<br>ஹோட்டல் கங்கா<br>லஷ்மி நாராயண ஹால்,<br>28 (16) ஆபிசர் லேன்,<br>வேலூர் - 632 001.<br>தொலைபேசி :<br>223060, 223160, 223260 | நாள் : 25, நவம்பர், 2000<br>ஸ்ரீ கணபதி ஹால் (முதல் தளம்)<br>ஹோட்டல் சக்தி கணபதி,<br>92, கிழக்கு ராஜ வீதி,<br>(பஸ் நிலையம் & மார்க்கெட் அருகில்)<br>காஞ்சிபுரம் - 631 502.<br>தொலைபேசி : 20307 |

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

## எங்களின் அடுத்த டெபாசிட் திரட்டும் முகாம்கள்

| | |
|---|---|
| திருவனந்தபுரம் | ஹோட்டல் ஹைலேண்ட்<br>நாள் : 4 & 5 டிசம்பர் 2000 |
| நாகர்கோயில் | ஹோட்டல் ப்ளூரெஸிடென்சி<br>நாள் : 6 டிசம்பர் 2000 |

# 12.12%

12 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 10.59%.
24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%
36, 48, 60 மாதங்களுக்கு மாதத்திற்கு வட்டி 12.00%,
காலாண்டிற்கு வட்டி 12.12%.

# 16.34%

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 12.00%)




*மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 64, டி.டி.கே சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.

தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982694.

30-9-2000 தேதியிட்ட ... வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

புட்டபர்த்தியிலிருந்து ஸ்பெஷல் ரிப்போர்ட்

# சத்ய சாயி-75

பெங்களூரிலிருந்து, புட்டபர்த்திக்கு நாங்கள் சென்ற பஸ், இடையில் நின்றது. கிராமத்து மக்கள் சாலையை ஒட்டி திரண்டிருந்ததுதான் காரணம். ஒரு லாரி, அதில் நிறைய வெள்ளைச் சீருடை அணிந்த மாணவர்கள். குழந்தைகள் முதல் முதியோர் வரை கூடியிருந்த மக்களுக்கு, உணவுப் பொட்டலமும், 'லட்டு'ம் வழங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குக் கொடுத்தபின்பு, மாணவர்கள் பஸ்சுக்குள் ஏறிவந்து, அமர்ந்திருந்த அத்தனை பயணிகளுக்கும் கொடுத்தனர்.

எதற்காக இந்த திடீர் விநியோகம்? ஒரு மாணவரைக் கேட்டபோது, "பகவான் பாபாவின் எழுபத்தி ஐந்தாவது ஜெயந்தி வரும் நவம்பர் இருபத்து மூன்றாம் தேதி. அதனைக் கொண்டாடும் விதமாய்த் தான் இந்த ஏற்பாடு. தினமும் காலை ஆறுமணிக்குப் புட்டபர்த்தி கல்லூரி மாணவர்களான நாங்கள் எல்லோரும் லாரிகளில் மொத்தம் ஐம்பதாயிரம் உணவுப் பொட்டலங்களும், லட்டும் எடுத்துக் கொண்டு போய் வினியோகிக்கிறோம். உணவுப் பொட்டலத்துடன் இனிப்பான லட்டு வழங்கப்படவேண்டும் என்பது பகவானின் உத்தரவு" என்றார்.

"நவம்பர் முதல் தேதி தொடங்கி இது நடக்கிறது. இந்த மாத இறுதிவரை தொடரும்" என்றார் அந்த மாணவர்.

"மனிதனுக்கு முதலில் உணவைக் கொடு. அடுத்தது உடை. மூன்றாவது இருப்பிடம் என்று சொல்லுவார் பாபா. அதன்படி இப்போது உணவு வழங்கப்படுகிறது. கூடவே உடைகளும் வழங்கப்படுகின்றன. ஏழை மக்களுக்கு வீடு கட்டித் தரும் திட்டம் ஒன்றும் விரைவில் செயல்படுத்தப்படவிருக்கிறது" என்று சந்தோஷமாய்ச் சொல்கிறார் பஸ்ஸில் உடன் வரும் ஒரு பாபா பக்தர்.

புட்டபர்த்திக்குள் நுழைகிறபோதே, நகரம் களைகட்டி விட்டது என்பது தெரிகிறது. வழி நெடுக அலங்கார வளைவுகள். அதில் பாபாவின் உபதேசமும், ஓவியங்களும் இடம் பெற்றுள்ளன. எங்கு பார்த்தாலும் பக்தர்கள் கூட்டம். தங்கள் வீட்டுக் குழந்தையின் முதல் பிறந்த நாள் போன்ற உற்சாகத்துடன் அனைவரும் காணப்படுகிறார்கள்.

பாபா பிறந்த நாள் நெருங்க, நெருங்க பக்தர் கூட்டம் அலை



• மில்லெனிய மியூசியம்



• தினம் ஐம்பதாயிரம் லட்டு!



• புது ரயில் நிலையம்




மோதும். அதனைச் சமாளிக்க ஜரூராகத் தயாராகிக் கொண்டிருக்கிறது பிரசாந்தி நிலையம். இந்தியாவின் பல்வேறு மாநிலங்களிலிருந்தும் சுமார் அறுபதாயிரம் சாயி சமிதிகளைச் சேர்ந்த சேவா தளத் தொண்டர்கள் புட்டபர்த்தி வந்து விட்டார்கள். பிரசாந்தி நிலையத்தின் தரை



• ஹுசைன் பாய்

யைப் பெருக்கி, சுத்தம் செய்வதில் தொடங்கி, உணவு சமைத்துப் பரிமாறுவதுவரை தாங்கள் செய்யும் ஒவ்வொரு பணியையும் வாழ்க்கையில் கிடைத்த பெரும் பேறாக எண்ணி அவர்கள் சேவை புரிகிறார்கள்.

தூரத்தில் மண்வெட்டி பிடித்து, தரையில் புற்களைச் செதுக்கிப் போட்டுக் கொண்டிருந்த வெள்ளை உடை சேவா தளத் தொண்டரைக் காட்டி, "அவர் அரசுடைமையாக்கப்பட்ட வங்கியொன்றின் ஜெனரல் மேனேஜர்" என்று பொறுப்பாளர் சொன்ன போது ஆச்சரியமாக இருந்தது. ஏ.சி. அறையில் உத்தியோகம் பார்த்துப் பழகிய அவரிடம், மண்வெட்டி பிடிப்பது பற்றிக் கேட்டால், "இதில் கிடைக்கிற சந்தோஷத்துக்கு ஈடு இணை இல்லை சாய்ராம்!" என்கிறார் புளகாங்கிதமடைந்து.

**நா**ற்பத்து இரண்டு வயது ராகேஷ் குமார் ரொம்ப இனிப்பான மனிதர். ஆம்! அவர்தான் பிரசாந்தி நிலையத்தில் இப்போது லட்டு மாஸ்டர். பதினைந்து லாரி சர்க்கரை, பத்துலாரி கடலை மாவு, மூவாயிரம் டின் எண்ணெய் வந்து இறங்கி இருக்கிறது. தினமும் காலை எட்டு மணிக்கு ஆரம்பித்தால் இரவு எட்டு மணி வரை, சேவா தளத்தைச் சேர்ந்த பெண்மணிகள் லட்டு பிடிக்கிறார்கள். "கை வலிக்கவில்லையா?" என்றால், பகவான் நாமத்தை உதடுகள் சொல்ல, கைக்கு எப்படி வலி தெரியும்? என்று கேட்கிறார் ஒரு பெண்மணி.

• சேவையில் சேவாதள தொண்டர்கள்






"பகவானின் பிரசாதம் கிடைப்பதே பாக்கியம். ஆனால், பிரசாதம் தயாரிக்கிற பாக்கியமே கிடைத்திருக்கிறது எங்களுக்கு"– பெரிய இடத்துப் பெண்மணி போன்ற தோற்றம் கொண்டவர் சொல்கிறார். அவரைப் பற்றி விசாரித்தால், "நான் ஒரு சாயி பக்தை. லட்சக்கணக்கான சேவாதாளத் தொண்டர்களில் ஒருத்தி. இது போதுமே என்னைப் பற்றி" என்று பேச்சை சட்டென்று முடிக்கிறார்.

இத்தனை பெரும் பக்தர் கூட்டம் திரண்டால், தங்குமிடத்துக்கு என்ன செய்வது? இதோ நான் இருக்கிறேன். அந்த வேலையை என்னிடம் விடுங்கள் என்று சொல்லிவிட்டார் ஹுசைன் பாய். பெங்களூர்க்காரர். லிம்கா சாதனைப் புத்தகத்தில் இடம் பெற்ற பிரம்மாண்டமான பந்தல் காண்டிராக்டர். லாரிகளில் சவுக்குக் கட்டைகளையும், தகர ஷீட்களையும் கொண்டு வந்து தள்ளுகிறார். அவரது எண்பது வேலையாட்கள், இதுவரை நாலு லட்சம் சதுர அடி பரப்புக்குத் தாற்காலிக ஷெட்கள் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். இது தவிர குளியலறைகள், கழிப்பறைகள் இன்ன பிறவும் உண்டு. ஹுசைன்பாய், காலை ஆறு மணிக்கு எழுந்தால், பம்பரமாய்ச் சுழல்கிறார். பிரசாந்தி நிலைய வளாகத்துக்குள்ளேயே தனக்கென அமைத்துக் கொண்ட ஒரு டெண்ட்டில் இரவு பதினோரு மணிக்குத்தான் தூங்கப் போகிறார். ஒன்னரை மாதமாகிறது இவர் வீட்டுக்குப் போய். இவரது குடும்பத்தில் ஒரு திருமணம் நடந்த போது, ஒரு நாள் மட்டும் போய் தலையைக் காட்டிவிட்டு வந்ததில் உறவினர்களுக்கு இவர் மேல் கொஞ்சம் வருத்தமாம்.

## ஓம் சாயிராம்

ஹலோ, வணக்கம், குட்மார்னிங், குட் ஈவினிங், குட் நைட்: இந்த வார்த்தைகளுக்கெல்லாம் துளிக் கூட அர்த்தமில்லாமல் போய்விடுகிறது புட்டபர்த்தியில். 'சாயி ராம்' என்ற வார்த்தையை காலையில் சொன்னால் அது குட்மார்னிங், ஒருவரையொருவர் பார்த்துக் கொள்கிறபோது சொன்னால் ஹலோ; விடை– பெறும்போது சொன்னால் குட் பை; ஆயிரக் கணக்கான சாயி பக்தர்கள் தினந்தோறும் பல நூறு தடவைகள் உச்சரிக்கும் வார்த்தை 'சாயிராம்.'

வாயிலிருந்து அவசியமில்லாமல் ஒரு வார்த்தை வருவதில்லை. வாயைத் திறந்தால் சாயிராம்! வழியை விட்டு நகர வேண்டுமானால் சாயிராம்! உங்களைக்

"இரண்டு முறை பாபாவை நான் மிக அண்மையில் தரிசித்திருக்கிறேன். இரண்டு தடவைகளுமே, எவ்வளவோ பேச வேண்டும் என மனது நினைத்தாலும், ரொம்ப எமோஷனலாகி கண்கள் கலங்கினவே தவிர, வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லை" என்று உணர்ச்சி பொங்கச் சொல்கிறார் ஹுசைன்பாய். பொதுவாகவே எந்தவித கெட்ட பழக்கங்களும் இல்லாத இந்த மனிதர், பிரசாந்தி நிலையப் பணியை ஏற்றுக் கொண்டபின், நான்-வெஜ்ஜுக்குக் கூட தாற்காலிகமாய் விடை கொடுத்து விட்டாராம்.

பாபாவின் எழுபத்து ஐந்தாவது பிறந்தநாளையொட்டி, மத்திய அரசு பாபா பக்தர்களுக்கு ஒரு பரிசளித்துள்ளது. ஆம்! புட்டபர்த்தியில் ஒரு ரயில் நிலையம் வந்துவிட்டது. மூன்று கோடி ரூபாய் செலவில் சலவைக் கற்கள் பதித்து, ஸ்டேஷன் ரெடி. பெயர்: ஸ்ரீசத்ய சாயி பிரசாந்தி நிலையம். பெண்ணுகொண்டா என்ற ரயில் நிலையத்திலிருந்து ஒன்பது கி.மீ. இருப்புப்பாதை

• சேவையில் மாணவர்கள்



கூப்பிட வேண்டுமென்றாலும் சாயிராம்! உங்கள் பெயர் எதுவானாலும் அது ஒரு பொருட்டல்ல.

ராமர் இந்துக் கடவுள். பாபாவோ, எல்லா மதங்களுக்கும் அப்பாற்பட்டவர். அதெப்படி சாயி–ராம் இரண்டும் இணைந்தன என்று ஒரு மூத்த சாயி பக்தரிடம் கேட்டபோது அவர் அளித்த விளக்கம்: ராமர்தான் அடுத்து கிருஷ்ணராக அவதரித்தார். கிருஷ்ணர் ஷீரடி சாயிபாபாவாக அவதரித்தார். ஷீரடி பாபாதான் இப்போது சாயிபாபாவாக அவதரித்திருக்கிறார். எனவே தான் ராமரின் அவதாரமான பாபாவை, சாயிராம் எனக் குறிப்பிடுகிறோம்.''

இன்னொரு பக்தர் அளித்த விளக்கம் சற்று வேறுபட்டது. ''ராமன் நம் கலாசாரத்தில் ஓர் அப்பழுக்கில்லாத அவதார புருஷர். பாபாவும் அப்படியே!''

அமைக்கப்பட்டு, இனி நேரடியாக புட்ட பர்த்திக்கே ரயிலில் போய் இறங்கலாம். சென்னையிலிருந்து புட்டபர்த்திக்கு நேரடி ரயில் விடப் போகிறார்கள்.

ஏற்கெனவே ஆன்மிகம் சம்பந்தப்பட்ட ஒரு மியூசியம். இயற்கை எழிலான குன்றின் மீது இருக்கிறது என்றாலும், 'மில்லெனியம் மியூசியம்' என்று உலகளாவிய ஆன்மிக மியூசியம் ஒன்று பிரும்மாண்டமான அளவில் உருவாக்கப்பட்டு வருகிறது. சீன பாணிக் கட்டடமான இதன் மேற்கூரைப் பகுதியில் பயன்படுத்தப்பட்டுள்ள சலவைக் கற்கள் சீனாவிலிருந்தே வரவழைக்கப் பட்டுள்ளன. இதில் தமிழ்நாட்டின் அம்சமாக மதுரை மீனாட்சி திருமணக் கோல வண்ண ஓவியம் இடம் பெற்றிருக் கிறது.

பகவான் பாபா தனது எழுபத்து ஐந்தாவது ஜெயந்தியையொட்டி, மக்களுக்கு விடுக்கும் சிறப்புச் செய்தி என்ன? என்று சத்ய சாயி சமிதிகளின் முக்கிய பொறுப் பாளர் ஒருவரைக் கேட்டபோது, ''அது பாபாவுக்கு மட்டுமே தெரியும், ஜெயந்தி அன்று அவரே அதை அருளுவார்'' என்றார்.

புட்டபர்த்தியிலிருந்து
**எஸ். சந்திரமௌலி**
படங்கள்: **யோகா**

# 108 நாட்கள்











2000 நவம்பர் 26
விக்ரம கார்த்திகை 11
மலர் : 59
இதழ் : 17

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## கிருஷ்ணசாமி கிழித்துப்போட்ட நடுநிலை அறிக்கை!

**ரா**ஜ்குமார் விடுதலையான குதூகலத்தில், கடந்த வாரம் சட்டசபையில் வெளியிட்ட இரண்டு முக்கியமான கமிஷன் அறிக்கைகள் அதிகம் கவனம் கவராமலே இருந்து விட்டன.

சென்னை மத்திய சிறையில் நடந்த கலவரத்துக்கான காரணங்களை ஆராய்ந்த நீதிபதி டேவிட் கிறிஸ்டியான் அறிக்கை ஒன்று. மற்றொன்று தாமிரபரணி ஆற்றங்கரையில் நடந்த துப்பாக்கிச்சூடு குறித்த நீதிபதி மோகனின் ஆய்வறிக்கை.

நீண்ட நெடும் நாட்களாகச் சிறைகளில் நிலவி வரும் அபாயகரமான குண்டர்கள் ராஜ்ஜியத்தை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்து சந்தேகங்களைத் தீர்த்து வைக்கிறது டேவிட் கிறிஸ்டியான் அறிக்கை.

'சிறையில் நடத்தப்பட்ட துப்பாக்கிச் சூடு நியாயமானதே' என்று உறுதி செய்கிறது. சிறைச்சாலைகளில் லஞ்ச-ஊழல்களைக் கட்டுப்படுத்துவதன் மூலம்தான் அங்கு குண்டர்கள் ராஜ்ஜியத்தையும் அதன் தொடர்பான அசம்பாவிதங்களையும் தடுக்க முடியும் என்பதை வலியுறுத்துகிறது.

**பு**திய தமிழகம் கட்சியின் தலைவர் டாக்டர் கிருஷ்ணசாமி, "இவ்வறிக்கை மனத்தைப் புண்படுத்துகிறது" என்று கூறி கிழித்துப் போட்டாலும் நீதிபதி மோகனின் அறிக்கை




நடுநிலையானதுதான்.

தாமிரபரணி ஆற்றங்கரை துப்பாக்கிச்சூடு நிகழ்ச்சியின்போது நடந்தவற்றை விவரிப்பதோடு, போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் எந்த கட்டத்தில், எப்படி தவறு செய்தார்கள் என்பதையும், காவல்துறையினர் எந்த கட்டத்தில் அத்துமீறினார்கள் என்பதையும் ஒருங்கே குறிப்பிடுகிறது அறிக்கை. மரணமடைந்தவர்கள் குடும்பத்துக்கு நஷ்டஈடும் தவறிழைத்த காவல் துறையினரின் பேரில் நடவடிக்கையும் சிபாரிசு செய்கிறது.

தமது தரப்பிலும் தவறு உண்டு என்பதை, சம்பவத்தையொட்டி ஒப்புக்கொள்ளாத டாக்டர் கிருஷ்ணசாமி இவ்வறிக்கையை ஏற்க மறுப்பதில் ஆச்சர்யமில்லை.

● கைதான மாஞ்சோலை தேயிலைத் தோட்ட ஊழியர்களை விடுதலை செய்யக் கோரி புதிய தமிழகம் நடத்திய ஊர்வலம், காவல்துறையினர் விதித்த எல்லையைக் கடந்து கலெக்டர் அலுவலகம் வரை முன்னேறியது தவறு.

● கூட்டத்தை அமைதியாகவும் ஒழுங்காகவும் நடக்கும்படி கேட்டுக் கொள்ளாதது கூட்டம் ஏற்பாடு செய்த தலைவர் டாக்டர் கிருஷ்ணசாமியின் தவறு.

● கட்டுப்பாடு இழந்த கூட்டத்தின் மீது காவல்துறை தடியடி நடத்தியது சரி; ஆனால் கூட்டத்தை தாமிரபரணி நோக்கி விரட்டியது அத்துமீறல் என்பது கமிஷனின் முடிவு.

அத்துமீறலில் ஈடுபட்ட மூன்று அதிகாரிகளுக்குக் கட்டாய ஓய்வைச் சிபாரிசு செய்துள்ளது கமிஷன்.

அரசும் ஒருபடி மேலாகச் சென்று ஜி.ஓ வெளியிட்டு, மூவர் பேரிலும் நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்துவிட்டது. கமிஷன் சிபாரிசுபடி, இறந்தர் குடும்பத்துக்கு நஷ்டஈடு அல்லது குடும்ப உறுப்பினர்களுக்கு வேலை வாய்ப்பு அறிவித்துவிட்டது.

இவ்வளவும் நடந்த பிறகும் புதிய தமிழகம் தலைவருக்கு அவ்வறிக்கையைக் கிழித்துப் போடத்தான் தோன்றியிருக்கிறது!

இத்தனைக்கும் அத்துமீறலுக்குக் காவல் துறையினர் தண்டிக்கப்பட்டதுபோல்




கூட்டத்தைக் கட்டுப்படுத்த வேண்டிய கடமையில் தவறியதற்காக கட்சித் தலைவர் தண்டிக்கப்படவில்லை; வெறுமே கண்டிக்கப்பட்டிருக்கிறார்.

அனைத்து அரசியல் ஊர்வலங்களும் தடை செய்யப்பட வேண்டும் என்று பொதுச் சிபாரிசைத்தான் கமிஷன் வெளியிட்டிருக்கிறது.

அரசு இது குறித்து ஆராய்வதாகச் சொன்னாலும், ஜனநாயக அமைப்பில் - அதுவும் இன்றைய தேர்தல் அமைப்பில் - இது சாத்தியமில்லாத காரியம்.

எனவேதான் ஊர்வலம் நடத்துகிற தலைவர்களின் பொறுப்பும் அதிகமாகிறது.

கூட்டத்தைச் சேர்த்து பலத்தை நிரூபிக்க முயற்சி செய்யும் கலாசாரத்துக்கு முடிவு கட்டுவது தலைவர்கள் கையில் இருக்கிறது.

கூட்டத்தின் எண்ணிக்கையும் குரலுயர்த்திய கோஷங்களும் ஒரு கட்சியின் பராக்கிரமத்துக்கு அடையாளமாகிவிட முடியாது. சேரும் கூட்டத்துக்கும் தேர்தலில் பெறும் வாக்குகளுக்கும் சம்பந்தமில்லை என்பது பல சமயங்களில் நிரூபணமாகியிருக்கிறது. பணத்தை வினியோகித்தால் எத்தனை கூட்டம் வேண்டுமானாலும் சேர்க்கலாம் என்பது இன்று மக்களுக்குத் தெரியும்.

காவல் துறையுடன் ஒத்துழைத்து, சட்டம் ஒழுங்கை மதித்து, அமைதியான முறையில் நியாயமான காரணங்களுக்காகப் போராடி வெற்றி பெறுவது மக்களிடையே மதிப்பை உயர்த்தும். ஆனால் இது கடினப் பாதை. உணர்ச்சியைத் தூண்டி, வன்முறையை நியாயப்படுத்தி பராக்கிரமத்தை வெளிப்படுத்துவது சுலபமான குறுக்கு வழி.

அத்தகைய குறுக்கு வழி அரசியல்தான் இன்று பெரும்பாலோரின் ஆயுதம். இந்தப் போக்கு மீண்டும் மீண்டும் பல தாமிரபரணித் துயரங்களைத்தான் தோற்றுவிக்கும்; மாஞ்சோலைப் பிரச்னைகளைத் தீர்த்து வைக்காது!

இது புரியாமல் கிருஷ்ணசாமிகள் கமிஷன் அறிக்கைகளைக் கிழித்துப் போடுவது அவர்களுக்கு அகௌரவம் என்பதுடன் தமிழக அரசியலின் துர்ப்பாக்கியம். ○



• இனிப்பு வழங்கப்படுகிறது...

# "இன்றைக்குத்தான் எங்களுக்குத் தீபாவளி"

'பெங்களூர் சதாசிவ நகர், எண்.249ல் வசிக்கும் திருமதி ஜமுனா, இந்த வருட தீபாவளியை அவ்வளவு உற்சாகமாகக் கொண்டாட வில்லை. "பக்கத்து வீட்டில் சோகமான சூழல் நிலவிக் கொண்டிருக்கும் போது, நாங்க மகிழ்ச்சியா தீபாவளி கொண் டாடினா சரியா வருமுங்களா. பசங்க பட் டாசு கூட வெடிக்கலை" என்கிறார் ஜமுனா. பக்கத்து வீட்டுக்காரர். ராஜ்குமார்!

ஜமுனாவுக்குச் சொந்த ஊர் சேலம். புகுந்த வீடு பெங்களூர். "நாங்க, ராஜ் குமார் குடும்பம் இங்க வருவதற்கு முன்பே வந்துட்டோங்க. ஏவி.எம். செட்டியாரிடம் இருந்து அடுத்த பங் களாவை விலைக்கு வாங்கினார் ராஜ்குமார். அவுங்க குடும்பம் ரொம்ப சகஜமா பழகுவாங்க. சூப்பர் ஸ்டார் பந்தா இல்லாமல் ராஜ்குமார் விசேஷ நாட்களின் போது கூப்பிட்டால், வந்து, இருந்து சாப்பிட் டுப் போவார். உண் மையா சொல்ல ணும்னா இன்னிக்குத் தாங்க தீபாவளி" என்றார் ஜமுனா.

அவர், சொல்லு வதற்குக் கட்டியம் கூறுகின்றன ஐந்து நிமிடத்துக்கொரு முறை ஏரியாவைக் கலக்கும் 5000 வாலாக்கள். கடந்த 15ம் தேதி அரசல் புரசலாக ராஜ்குமார் ரிலீ ஸாகிவிட்டார் என்ற செய்தி தாமதமாக சோம்பல் முறிக்கும்



• மூன்றாவது மாடியில்...

பெங்களூர் வாசிகள் மத்தியில் காலை வேளையில் பரவியபோது நம்ப மறுத்தவர்கள் தான் அதிகம். குறிப்பாக 'தடா' கைதிகளை விடுவிக்கக் கூடாது என்று சுப்ரீம் கோர்ட் 'தடா' போட்டவுடன் கன்னட அபிமானிகள் மத்தியில் ஒரே படபடப்புதான். இனி எப்படி ராஜ்குமார் விடுதலைக்கான யுக்தி வகுக்க முடியும்? என்பதே எல்லோரின் கேள்வியாகவும் இருந்தது. ஆனால் எதிர்பாராத சந்தோஷத் திருப்பமாக, நெடுமாறன் தலைமையில் இரண்டாவது முறையாகப் போன தூதுக்குழு சாதித்துவிட்டது. "கடவுள் எங்கள் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து விட்டார். எல்லோருக்கும் நன்றி... இதற்கு மேல் எதுவும் சொல்லத் தோன்றவில்லை" என்று நம்மிடம் சொன்னார் ராஜ்குமார் மகன்களில் ஒருவரான சிவராஜ்.

சதாசிவ நகர் மட்டுமல்ல; பெங்களூரே ஒரே குதியாட்டத்தில் இருந்தது. யமஹாவிலும், சுசுகியிலும், மஞ்சள், சிவப்பு வண்ணம் படபடக்கும் கொடியோடு நகரை வலம் வந்து கொண்டிருந்தார்கள் இளசுகள். தெரு முனைகளில் முடிச்சு, முடிச்சாக காவலர்கள். ராஜ்குமார் வீட்டை எல்லோரும் நெருங்கி விடாதபடி சற்று தூரத்தில் தடுப்புக் கட்டைகள். பத்திரிகைக்காரர்களை கடுமையான சோதனைக்குப்பின் விடும் போலீஸ். ராஜ்குமார் வீட்டு வாசலில் வாழை மரம், மாவிலை தோரணம். கேட்டுக்கு வெளியே 'செல்'லில் அலறும் நியூஸ் சேனல்காரர்கள். ஆயிரக்கணக்கில் பட்டியல் போடுமளவுக்கு வீட்டைச் சுற்றி நான்கு புறமும் கூட்டம்... கூட்டம்... இள ரத்தங்கள் சிலர் ராஜ்குமார் வீட்டு மதில் சுவரைத் தாண்டி உள்ளே வர துணிகின்றனர். அதிரடிப்படை அவர்களை விரட்டுகிறது. ஆவேசம் கொண்ட கும்பல் செருப்புகளைத் தூக்கி அவர்கள் மேல் எறிகிறது. ஓரமாய் ஒதுங்கி நிற்கும் ஸ்கூட்டருக்கு ஆபத்து வந்து சேர்கிறது. உயரே கடும் புகை மண்டலம்.

"ஹெச்.ஏ.எல். ஏர்போர்ட்டில் 'லேண்ட்' ஆகிவிட்டாராம். இன்னும் கொஞ்ச நேரத்தில் விதான் சவுதாவுக்குப் போய் விடுவார். ஒரு மணி நேரம் பத்திரிகையாளர் சந்திப்பு. சரியாக ஒரு மணிக்கு வந்து விடுவார்" என்கிறார் நியூஸ்வாலா ஒருவர். இடைப்பட்ட நேரத்தில் சினிமா உலக பிரமுகர்கள் ஒவ்வொருவராக வருகின்றனர். கடத்தப்படுவதற்கு முன்பு ரிலீஸான ராஜ்குமார் படம் சப்தவேதி. அதில் ஜோடி: ஜெயப்ரதா. ராஜ்குமார் வருகையை 'லைவ்வாக' பெங்களூர் கேபிள்களில் ஒளிபரப்பிக் கொண்டிருக்கும் கேபிள் நியூஸ்காரர்களிடம் "சந்தோஷம்... சந்தோஷம்" என்று சொல்லியவாறே போகிறார் ஜெயப்ரதா. அடுத்து ஜெயந்தி. ராஜ்குமார் கடத்தப்பட்ட நாளிலிருந்து கன்னட திரைப்பட உலகத்தை ஒருங்கிணைத்து பதற்றப்பட்டுக் கொண்டிருந்தார் ஜெயந்தி. ராஜ்குமார் விதான் சவுதாவை விட்டுப் புறப்பட்டுவிட்ட தகவல்வர, பெரிய பூசணிக்காயை மேலே கட்டி கற்பூரம் தயாராக வைக்கப்பட்டிருக்கிறது. தெரு முனையில் சைரன்கள் அலறிக் கொண்டு வந்த கார்கள் பங்களாவின் உள்ளே அணிவகுத்துச் செல்கின்றன.


• ஜமுனா


• கார்கே

பூசணிக்காய் திருஷ்டி சுற்றலுக்குப் பின்னர் உள்ளே சென்ற ராஜ்குமார் மாடியில் நேராக தனது தாய் தந்தையர் படங்களை முதலில் வணங்கிவிட்டு, பேரன், பேத்திகளுடன் கொஞ்சினார். வெளியே கூச்சலிட்ட ரசிகர்களைச் சந்தோஷப்படுத்த மொட்டை மாடிக்கு அழைத்து வரப்பட்டார். "இது எனக்குப் புனர் ஜன்மம். உங்க அன்பு, ஆசீர்வாதம் தான், நான் மீண்டு வரக் காரணம். யாருக்கும் எந்த தொல்லையும் கொடுக்காதீர்கள். அன்பாக இருங்கள், அமைதியாக கலைந்து செல்லுங்கள்" - இதுதான்


• மனைவியுடன்...



• திரண்டிருந்த ரசிகர்கள்

ராஜ்குமார் மூன்று முறை மொட்டை மாடியில் தோன்றிப் பேசியதன் சுருக்கம். ஒவ்வொரு முறை பேசியவுடன் கன்னட மாதாவுக்கு ஜே சொல்லிவிட்டு இரு கைகளையும் நீட்டி "நீங்க என் மனசில் இருக்கிறீர்கள்" என்பது போல ரசிகர்களிடம் நெஞ்சைத் தொட்டுக் காண்பித்தார் ராஜ்குமார். கூட்டம் நெக்குருகி ஆவேசக் கூச்சலிட்டது.

**ச**ரியான சந்தர்ப்பத்தில் வீட்டின் உள்ளே நுழைந்து, ராஜ்குமாரின் தனிப்பட்ட காவலர்களாக இருந்த சில தாடிகாரர்களின் (நிறைய தாடிகள். ராஜ்குமார் விவகாரத்தில் வேண்டுதல் போலிருக்கிறது!) கெடுபிடிகளை யும் மீறி ராஜ்குமாரைச் சந்தித்தோம். "தமிழ் நாட்டு மண்ணை எப்படி மறக்க முடியும்? எனக்குச் சோறு போட்ட மண் அல்லவா அது. எனக்கும் தமிழ்நாட்டுக்கும் உள்ள பந்தம் தொடரும். என் மக்கள்களில் ஒருவருக்குத் தமிழ்நாட்டில் திருமண பந்தம் செய்து வைத்து உறவு தொடர ஆசைப் படுகிறேன்" என்றவரிடம், உங்க இஷ்ட தெய்வம் எது? என்றோம். "என் தாய் தந்தை யர்தான் எனக்கு இஷ்ட தெய்வம். அவர்கள் செய்த புண்ணியம்தான் என்னைக் காப் பாற்றியிருக்கிறது."

"அடுத்து ஷூட்டிங்குக்கு எப்போது செல்கிறீர்கள். உங்கள் ரசிகர்கள் ஆவலோடு காத்துக் கொண்டிருக்கிறார்களே" என்ற வுடன், "அவங்க எதிர்பார்ப்புக்கு ஏற்றாற் போல் நல்ல படம் கொடுக்க வேண்டாமா?" என்றார் ராஜ்குமார்.

கொஞ்சம் சகஜமாகி வந்த ராஜ்குமாரி டம் சில விளக்கங்களைக் கேட்கலாம் என்று அடுத்த கேள்வியைக் கேட்கத் துவங்கிய போது சுட்டெரிப்பது போல நம்மைப் பார்த்தார் பர்வதம்மா. சரியான சென்சார் அதிகாரி! "போட்டோ மட்டும் தான். கேள்வி கேட்காதீங்க" என்று புள்ளி வைத்தார்.

**இ**ப்போது எல்லோர் முன்னும் நிற்கும் கேள்வி: "வீரப்பனின் எந்த கோரிக் கைகளும் அமுல்படுத்தப்படாத நிலையில் ராஜ்குமார் விடுதலை எப்படி சாத்தியமாயிற்று?" என் பதுதான். "பணம் விளையாடி இருக்கிறது" என்பது அடுத்த தாக உலா வரும் வதந்தி. இந்தக் கேள்விகளுடன் கர்நாடக மாநில உள்துறை அமைச்சர் மல்லிகார்ஜுன கார்கேயைச் சந்தித்தோம்.

"வீரப்பனுக்கு (ராஜ்குமாரை விட்டுவிடு வதைத் தவிர) வேறு என்ன வழி இருக்கிற தென்று நீங்கள் கருதுகிறீர்கள்? ராஜ் குமாருக்கு ஏதேனும் ஆபத்தை உண்டாக்கி இருந்தால் நாங்கள் சும்மா இருப்போமா? மனிதாபிமானம் தான் காரணம்" என்று பதி லடி கொடுத்தார் கார்கே. "பேச்சுவார்த்தை களில் எங்களுக்கு நம்பிக்கை இருந்தது. பண விவகாரமெல்லாம் எங்களுக்குத் தெரியாது" என்றார் அவர். "வீரப்பனை எப்போது பிடிக்கப் போகிறீர்கள்" என்று கேட்டால், "மத்திய மாநில அரசுகள் பேசி நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று வழுக்கினார்.

"சக்தி" வடிவமாக காட்டுக்கு வந்து யுக்தி யால் எனது விடுதலைக்கு வழி வகுத்தவர், என்று ராஜ்குமாரால் ஏகமாய்ப் புகழப்பட் டார் டாக்டர் பானு என்பவர். "வீரப்பன் விவகாரத்தில் கண்ணுக்குத் தெரியாத பல சக்திகளும் களத்தில் இறங்கி வேலை செய் திருக்கின்றன என்பது இப்போது தெரிய வருகிறது. ஏற்கெனவே இங்குள்ள ஒரு சர்ச்சில் குண்டு வெடித்தது சம்பந்தமாகத் துப்பறிந்த போது ஐ.எஸ்.ஐயின் நடமாட்டம் பெங்களூரில் இருந்தது தெரிய வந்தது. இப்போது தமிழத் தீவிரவாதம் பேசும் குழுக் களுக்கும் நல்ல அடித்தளம் இங்கிருப்பது புரிகிறது. முன்பு ராஜீவ் காந்தி கொலை யாளிகள் இங்கு வந்து தான் ஒளிந்திருந் தார்கள். ஏற்கெனவே பல தலைவர்களுடன் அல்லாடிக் கொண்டிருக்கும் எங்களுக்கு ராஜ்குமார் ரிலீஸ் புதிய தலைவலியைச் சுட்டிக் காண்பித்திருக்கிறது" என்கிறார் கர்நாடக உளவுத்துறை அதிகாரி ஒருவர்.

— **சஞ்சயன்**

படங்கள்: **ராஜன்**



# 100% திருப்தி

## நியாயமான விலையில்
## அற்புதமான வீட்டு மனை

# கிருஷ்ணா நகர்

(அரசு அங்கீகாரம் பெற்ற மனைகள் DTP/LPDM-16-74)

## மேடவாக்கம்

சென்னை – 601302 (வேளச்சேரி அருகில்)

### சிறப்பு அம்சங்கள்

- மாநகருக்கு மிக அருகில் • கவர்னர் மாளிகையிலிருந்து 20 நிமிட பயணம்
- அடையாறு,திருவான்மியூர், வேளச்சேரி , கிண்டி மற்றும் தாம்பரத்திலிருந்து ரயில் மற்றும் பஸ் வசதி
- நன்கு திட்டமிட்ட மனைப்பிரிவு, சுற்றிலும் வேலி
- சுற்றிலும் நல்ல வீடுகள்
- 12′ ஆழத்தில் சுவையான நீர்
- அருகாமையிலேயே நல்ல பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவமனைகள், கடைகள் போன்ற அனைத்து வசதிகள்
- சுத்தமான பத்திரம், நம்பகமான நிறுவனம்
- 5 வருட மனை பாதுகாப்பு சேவை

*Conditions apply

**சுந்தரம் ஹோம் பைனான்ஸ் லிட்**
**அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பத்திரங்கள்;**
**நிதி உதவியும் உண்டு.**

**FREE SITE VISITS DAILY : 7 am ,11 am & 3 pm**
**Ph : 4357721/31 Tel-fax.4353183 . Cell : 98400-44018**
**E-mail: blbestmail@vsnl.net**




## BLB Estates (P) Ltd.

S-3,"Ramana Flats" 27, Rathna Nagar, Off Anna Salai,
(Behind Apollo Cancer Hospital), Teynampet, Chennai - 18.

**நன் மதிப்பில் முதலீடு.**

# 'ஒரு இறைவன்!'

அந்த ஐம்பதெட்டு வயது ஈராக்காரர், ஸ்வீடனில் வசிக்கிறார். இப்போது புட்டபர்த்தி வந்திருக்கிறார். இது அவருடைய இரண்டாவது புட்டபர்த்தி விஜயம். பத்தாண்டுகளுக்கு முன்னர் பாபா பற்றி ஒரு யோகா மாஸ்டர் மூலம் முதல் தடவையாகக் கேள்விப்பட்டாராம். "என்னவோ தெரியவில்லை அதன்பிறகு பாபா என் கனவில் அடிக்கடி வர ஆரம்பித்தார். பாபா பற்றி நிறைய புத்தகங்கள் படித்தேன். ஈராக் போர் காரணமாக எங்கள் குடும்பம் பல தொல்லைகளுக்கு ஆளானது. என் தம்பியையும், தங்கையையும் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு. எனவே பலதடவை புட்டபர்த்தி வர விரும்பியும், பொருளாதார நிலை தடுத்தது. இப்போது எல்லாம் செட்டிலாகிவிட்டது. நான் சுதந்தரமாகிவிட்டேன். போன வருடம் வந்தேன். இதோ மறுபடியும்" என்று கூறும் இவர் ஒரு இஸ்லாமியர். பெயர் ஜமால் முகமது ராம்சே.

நாம் பார்த்த அயல்நாட்டு பக்தர்களில் தொண்ணூறு சதவீதத்தினரின் கழுத்தில் இருந்த செயினில் சிலுவையும், கூடவே சாயி பாபா டாலரும் இருந்ததைக் காண முடிந்தது.

ஆண்டுதோறும் பல நாடுகளிலிருந்து பக்தர்கள் பாபாவை தரிசிக்கப் புட்டபர்த்தி வருகிறார்கள். இன்ன நாடு என்று கணக்கில்லை. "கபான் என்று ஒரு நாட்டின் பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? ஆப்ரிக்காவில் இருக்கும் சின்னஞ் சிறு நாடு. அந்தக்கால பிரெஞ்சு காலனி. மொத்த ஜனத்தொகையே பன்னிரண்டு லட்சம்தான். அங்கேயிருந்து ஒரு பக்தர் வந்தார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்' என்கிறார் அயல்நாட்டு பக்தர்களுக்காக பிரசாந்தி நிலைய வளாகத்தில் உள்ள பிரத்யேகப் பிரிவில் சேவை செய்யும் ஒரு சாயி பக்தர்.

கரென் கிறிஸ்டின், பிரிசெவி இருவரும் அமெரிக்கப் பெண்மணிகள். கரென், இன்டீரியர் டிசைனிங் நிபுணர். பிரிசெவி அவரது உதவியாளர். புட்டபர்த்தியில் கட்டிக் கொண்டிருக்கும் மில்லெனிய மியூசியத்தில் பணிபுரிய அமெரிக்காவிலிருந்து வந்திருக்கிறார்கள். "தொழில் நிமித்தம் இங்கே வந்தாலும், இங்கே நாங்கள் காண்பவை எங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்துகின்றன. இத்தனை பேரை உலகம் முழுவதிலிருந்தும் கவர்ந்திழுக்கும் சக்தி கொண்டிருக்கிறார் பாபா!" என்கிறார்கள் இந்த இருவரும்.

ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த நர்ஸ் மவூரி. 1992ல் ஒரு புத்தகத்தின் வாயிலாக பாபா பற்றி அறிந்ததுமுதல் அவர் மீது பக்தி ஏற்பட்டுவிட்டது இவருக்கு. சென்ற ஆண்டு, உடல்நலம் குன்றியிருந்த தன் கணவரை அழைத்துக் கொண்டு, புட்டபர்த்தி வந்திருந்தார் இவர். சில மாதங்களுக்கு முன் கணவர் இறந்துவிட்டார். ஆனாலும், இப்போது புட்டபர்த்தி வந்திருக்கிறார். இரண்டு மாதம் இங்கே தங்கியிருக்கப் போகிறார். புட்டபர்த்தியில் உள்ள பொது மருத்துவமனையில் நடக்கவிருக்கும் மருத்துவ முகாமில் சேவை செய்யப் போகிறார்.



• மவூரி



• ஜமால் முகமது



• கரென், பிரிசெவி

பாபா 75

## புட்டபர்த்தியில் அயல்நாட்டுப் பக்தர்கள்!

ஆஸ்திரேலியாவில் நர்சாக சேவை புரிவதற்கும், இங்கே சேவை புரிவதற்கும் என்ன வித்தியாசம் காண்கிறீர்கள் மலூரி?

"அங்கே நான் சேவை செய்யவில்லை; சம்பளத்துக்குப் பணிபுரிகிறேன். இங்கே நான் செய்வது வசதியில்லாத ஏழை மக்களுக்குச் சேவை. அதிலே வாழ்க்கைக்கு வசதி கிடைக்கிறது; இங்கே மனத்துக்கு நிம்மதி. இந்த சந்தோஷமே அலாதி!"

புட்டபர்த்தியில், அயல்நாட்டு பக்தர்களுக்கான சிறப்புப் பிரிவில் இருக்கும் விஸ்வநாதன், "முந்தைய பிறப்பில் ஷிர்டி ஸ்தலத்துடன் தொடர்புடையவர்கள்தான் இந்த அயல்நாட்டு பக்தர்கள். இல்லையெனில் பாபாவுடனான தொடர்பு இவர்களுக்கு ஏன் திடீரென்று வரவேண்டும்?" என்று கேட்கிறார்.

"பாபா, பக்தர்களுக்காக விபூதி வரவழைப்பது, லிங்கம் வரவழைப்பது எல்லாம் அற்புதங்களே அல்ல. ஒவ்வொரு தனி மனிதர் மனத்திலும், வாழ்க்கையிலும் இவர் நடத்திய, நடத்திக் கொண்டிருக்கிற அற்புதங்கள் இருக்கின்றனவே அவை ஏராளம். பெரும்பாலும், அயல் நாட்டு பக்தர்கள் வாழ்க்கையில் ஏதாவது ஓர் அற்புதம் நிகழ்ந்திருக்கும். அதைச் சொன்னால் பலர் நம்பமாட்டார்கள். ஆனால் அவை அனைத்தும் நிஜம்" என்கிறார் இவர்.

இங்கு வரும் அயல்நாட்டு பக்தர்களால், புதிய பிரச்னைகள் ஏதும் வந்துவிடக் கூடாது என்று கவனமாக இருக்கிறது பிரசாந்தி நிலையம். அயல் நாட்டு பக்தர்கள் வந்து இறங்கியவுடன் அவர்களது பாஸ் போர்ட், விசா ஆகியவை பரிசோதிக்கப் படுகின்றன. இவர்களுக்கென்றே மேற்கத்திய பாணி உணவு வகைகள் கிடைக்கும் கேன்டீன் ஒன்றும் செயல்படுகிறது.

அயல்நாட்டுப் பக்தர்களுக்கென்றே தினமும் காலை எட்டுமணிக்குப் பிரத்யேக சொற்பொழிவு ஒன்று நடக்கிறது. அதில் பிரசாந்தி நிலைய விதிமுறைகள், மரபுகள், பற்றி எடுத்துரைக்கப் படுகிறது.

பக்தர்களின் பாஸ்போர்ட், விசா சம்பந்தப்பட்ட பிரச்னைகளுக்கு ஆலோசனை கூறி, உதவுவதற்கென்றே ஆந்திர அரசின் காவல் துறை அதிகாரி ஒருவர் இங்கு இருக்கிறார். உள்ளூர்வாசிகளும், சமூக விரோதிகளும், அயல்நாட்டுப் பக்தர்களுடன் தொடர்புகள் ஏற்படுத்திக் கொண்டு, பிரச்னைகள் ஏற்படுவதைத் தடுப்பதில் பிரசாந்தி நிலையம் பிரத்யேக அக்கறை காட்டுகிறது.

ஒரு ஐரோப்பியப் பெண்மணி, கூடவே குட்டி தேவதைகள் போல இரண்டு குழந்தைகள். அவரை நிறுத்திப் பேசினால் பதில் இல்லை. தயங்கியபடி சொன்னார், "நோ இங்கிலீஷ்."

பாபாவின் அருள்பார்வை மொழி, மதம், நாடு கடந்ததாயிற்றே!

— கௌதம் ராம்

படங்கள்: யோகா

# KALKI SHOPPING PAGE

## நித்திய வேள்வியில் புடமாகும் மானுடம் சத்தியம் தரிசிக்க சாதனை நூல்கள்

| | |
|---|---|
| மந்திர சக்தியும் யந்த்ர பூஜைகளும் | ரூ. 22.00 |
| மந்திர சித்தி பெற மகத்தான வழிகள் | ரூ. 22.00 |
| சர்வமும் சித்தியாகும் மந்திரங்கள் | ரூ. 22.00 |
| நிம்மதியான வாழ்வு பெற மந்திரங்கள் | ரூ. 23.00 |
| வறுமை கடன் நோய் விலக மந்திரங்கள் | ரூ. 18.00 |
| மலையாள மந்திரமும் யந்த்ரங்களும் | ரூ. 22.00 |
| சித்தர்களின் சிறந்த மந்திரங்கள் | ரூ. 20.00 |
| வளமுடன் வாழ 108 மந்திரங்கள் | ரூ. 12.00 |
| குபேர சம்பத்து தரும் சக்கரங்கள் | ரூ. 15.00 |
| வியாபாரம் தொழில் பெருக மந்திரங்கள் | ரூ. 22.00 |
| வாழ்க்கையில் வெற்றிபெற மந்திரங்கள் | ரூ. 23.00 |
| நினைத்ததை நிறைவேற்றும் மந்திரங்கள் | ரூ. 22.00 |
| கேட்டவரம் கிடைக்கும் மந்திரங்கள் | ரூ. 25.00 |
| மந்திரமும் யந்த்ரமும் தகடுகளும் | ரூ. 22.00 |
| ஆயுள் விருத்தியாகும் மந்திரங்கள் | ரூ. 32.00 |
| க்ஷேத்திர தரிசனங்களும் பலன்களும் | ரூ. 24.00 |
| வழிபாட்டுச் சடங்குகளும் பலன்களும் | ரூ. 21.00 |
| பண்டிகைகளும் பலன்களும் | ரூ. 20.00 |

வி.பி.பியில் பெற கடிதம் எழுதுங்கள் :



**யமுனா பிரசுரம்,**
18/1, ராஜாபாதர் தெரு,
தி. நகர்,
சென்னை – 600 017.
தொலைபேசி : 8241 865.

---

FOR COMFORTABLE AND ECONOMICAL STAY AT
**NEW DELHI**
VISIT

# HOTEL DURGA DELUX

(Govt. Approved)
5/40, W.E.A. SARSWATI-MARG
KAROL BAGH, NEW DELHI - 110005
Telephone: 011-5785648
011-5785610, 011-5766243
FAX : 011-5753040

TOUR & TRAVEL FACILITY

STD/ISD FACILITY

FOR LOCAL ENQUIRY AT **CHENNAI**
CONTACT: 044-4724327
(AFTER 6 PM ONLY)

---

**D.K. MURTHY & Co.**

**E.A. SWAMY JEWELLERS**

30, NORTH MADA STREET,

MYLAPORE, CHENNAI - 600 004.

Manufacturers of:

Gold, Diamond, and GEMSET works.

Specialists in:

Bharathanatyam JEWELS

PARTNERS:

Mrs. Shanthi Shankar

(D/o. D.K. Murthy) - 4934907

Mr. A. Rajagopal - 4956497

---

வாசிக்கத் தவறாதீர்கள்......

**உங்கள் நாவல்**

எழுத்துச் சித்தர்

**பாலகுமாரனின்**

கை வண்ணத்தில்

**மீண்டும் வா**



சென்னை அப்போலோ மருத்துவமனையில் பணிபுரிகிறார் டாக்டர் ஹீராமாலினி சேஷாத்ரி. இவர் நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்தால் அதில் வியப்படைய எதுவுமில்லை. ஆனால் இவர் ஒன்றுக்கு மூன்றாக ஒலி நாடாக்களை வெளியிட்டிருக்கிறார். அத்தனையும் பாபாவைப் பற்றிய பாடல்கள். நாம சங்கீர்த்தனம் எனப்படும் பஜனைப் பாடல்கள் பாபா குறித்துப் பல இயற்றப் பட்டிருக்கின்றன. ஆனால் இந்த ஒலி நாடாக்களில் இடம் பெற்றுள்ளவை கர்நாடக சங்கீதக் கீர்த்தனைகள். இவற்றை எழுதியதோடு பாடவும் செய்திருக்கிறார் இந்த டாக்டர்.



"**நா**ன் எங்கே எழுதினேன்? பகவானல்லவா என் மூலம் எழுதியிருக்கிறார்?" என்றவரிடம் "ஒருபுறம் தர்க்கரீதியான விஷயங்களுக்கு மட்டுமே இடமளிக்கும் அறிவியலின் ஒரு பிரிவான மருத்துவம், மறுபுறம் லீலைகளுக்காகவும் பெயர் பெற்ற பாபா பக்தி ஆகிய இரண்டிலும் ஆழ்ந்து ஈடுபடுவதில் ஒருவித முரண்பாடு தெரியவில்லையா?" என்று கேட்டோம்.

"இதில் எங்கே முரண்பாடு வந்தது? பிரேதத்திற்கும் நடமாடும் மனிதனுக்கு மிடையே உள்ள வேற்றுமை என்பது ஆத்மாதானே. இந்த உலகிலுள்ள அத்தனை ஆத்மாவையும் ஆட்டி வைப்பவன் பரமாத்மா. அந்தப் பரமாத்மாவை நான் பாபாவின் வடிவில் தரிசிக்கிறேன். மருத்துவராக நான் மருந்தைக் கொடுக்கலாம். நோயாளி அதை உட்கொள்ளலாம். ஆனால் அந்த மருந்து எப்படி வேலை செய்கிறது, எப்படி குணமளிக்கிறது என்பதெல்லாம் 'அவர்' செயல்தான் என்பது என் கருத்து" என்ற டாக்டரின் (பக்தையின்) பாபா ஈர்ப்பு, வளர்ந்த சூழலால் வந்ததல்ல. அதாவது இவரது பெற்றோர்கள் தீவிர பாபா பக்தர்கள் அல்ல. இவருக்கும் இவரது இரு சகோதரிகளுக்கும் எல்லா விதங்களிலும் பரிபூரண சுதந்தரம் வழங்கப் பட்டதாம், 'கடவுள் நம்பிக்கையை வளர்த்துக் கொள்கிறாயா? சரி. இல்லையா? அப்போதும் சரி' என்கிற விதத்தில்.




"என் அப்பா கொல்லத்தில் கலெக்டராகப் பணியாற்றியபோது, அந்தப் பகுதிக்குப் பாபா வந்திருந்தார். அப்போது எங்கள் குடும்பத்தினரை ஆசீர்வதித்தார். யாரோ ஒரு சாமியார் என்று மட்டுமே அப்போது எனக்குப்பட்டது. பிறகு 1991ல்தான் ஸ்வாமி என் வாழ்க்கையை வழி நடத்தத் தொடங்கினார். அந்த வருடம் என் அம்மா இறந்தது எனக்குத் தாங்க முடியாத அதிர்ச்சி. அதைவிட "அம்மா இப்போது எங்கே இருக்கிறாள்?" என்ற கேள்விக்குப் பதில் கிடைக்காவிட்டால் அமைதியே கிடைக்காது என்று தோன்றியது.

அம்மா அலமாரியில் பலவித தெய்வப் படங்களை வைத்திருந்தாள். அவற்றுக்கு நடுவே, தெரிந்த ஒருவர் அனுப்பியிருந்த பகவான் சாயிபாபாவின் போஸ்ட் கார்ட் உருவமும் இருந்தது. அம்மா இறந்த சில நாட்களுக்குப் பிறகு அம்மாவின் புகைப்படத்தில் விபூதி நிறையத் தென்பட்டது. அதேபோல் பாபாவின் உருவத்தின்மீதும்! "உன் அம்மா என்னிடம்தான் இருக்கிறாள்" என்று பாபா எனக்கு உணர்த்துவதாக எண்ணினேன். அதன் பிறகு நான் பாபாவின் பக்தையாகி விட்டேன்."

பக்திக்கான விளக்கம் இது. பாட்டுக்கானது என்ன?

அப்பாவுக்கு அடிக்கடி உத்தியோக மாற்றம்



# பாட்டு டாக்டர்!

என்பதால் தொடர்ந்து ஒரே ஆசிரியரிடம் இசை பயில முடியவில்லையாம். பள்ளிப் பருவம் வரை நாலைந்து ஆசிரியர்களிடம் கர்நாடக இசை பயின்றிருக்கிறார்.

"ஒருமுறை 'பவன்ஸ் ஜர்னல்' இதழைப் படித்த போது அதில் கல்கி சதாசிவம் பற்றிய ஒரு கட்டுரை வந்தது. சுதந்தரப் போராட்டத்தின் போது அவர் எந்த அளவில் அதில் ஈடுபட்டார் என்பதையெல்லாம் விவரித்திருந்தார்கள். என் குழந்தைகளுக்கு அவரைப் போன்ற ஒரு சுதந்தரப் போராட்ட வீரரை அறிமுகம் செய்தால் அவர்களுக்கு சுதந்தரத்தின் அருமை தெரியுமே என்று பட்டது. அவரையே சந்தித்தால் என்ன என்று தோன்ற, உடனே தொலைபேசியில் தொடர்பு கொண்டேன். காரியதரிசி "அப்புறம் பார்க்கலாமே" என்கிற வகையில் பதிலளிக்க, தற்செயலாக அந்தத் தொலைபேசியின் வேறொரு இணைப்பை எடுத்த சதாசிவம் மாமா "வாயேன், இன்னிக்கே குழந்தைகளுடன் வா'' என்றார். பரவசத்துடன் போனோம். எம்.எஸ். இருந்தார். இட்லி கொடுத்து உபசரித்தார்கள். வேலூர் சிறைச்சாலையில் தாம் அனுபவித்த தண்டனையை சதாசிவம் மாமா உற்சாகத்துடன் விவரித்தார். பிறகு இக்காலக் குழந்தைகளின் மனத்தைக் கெடுப்பதில் தொலைக்காட்சி பெரிய பங்கு வகிக்கிறது என்றார். "சத்ய சாயிபாபா கூடச் சொல்லியிருக்காரே, அது டெலிவிஷன் இல்லே, டெலி விஷம்னு" என்றார். தொடர்ந்த பேச்சில் ''பாபா ஒரு அவதாரம்'' என்றார். எம்.எஸ். சரஸ்வதி தேவியின் அவதாரம் எம்.எஸ். என்று நாங்கள் கருதுகிறோம். அன்று வீட்டுக்குத் திரும்பியதும் பாபா தன்னைப் பற்றிய கிருதியை என்னை எழுத வைத்தார்."

அதற்குப் பிறகு இவர் எழுதிய பல கீர்த்தனைகளைத் தமது மகளோடு இணைந்து மேடைகளில் பாடியிருக்கிறார். விரைவிலேயே 81 கிருதிகள் அடங்கிய புத்தகம் ஒன்றையும் வெளியிட இருக்கிறார். சிவபெருமான், கிருஷ்ணர், சாமுண்டேஸ்வரி ஆகிய பல தெய்வங்களைப் பற்றிய பாமாலை என்றாலும் அத்தனையிலும் 'சாயி முத்திரை' இருக்குமாம். தாம் எழுதிப் பாடிய ஒலிநாடாக்களைப் பல கர்நாடக இசை வித்வான்கள் பாராட்டியிருப்பது பெரும் ஆனந்தம் தருவதாகக் கூறும் இவருக்கு, இந்தப் பாடல்களை வித்வான்கள் மேடைகளில் பாடினால் பெரு மகிழ்ச்சியாக இருக்குமாம்.

**— ஜி.எஸ்.எஸ்.**

படம்: **ஸ்ரீஹரி**



• டி.பி. பாலசுப்ரமணியன்:

சென்னை அடையாறில் உள்ள 'சுந்தரம்' ஆலயத்தில் பாபா பிறந்த நாள் பஜனைக்காக வந்திருந்த பக்தர்கள் சிலரைச் சந்தித்தோம்... பாபா தங்கள் வாழ்க்கையில்

# அற்புதங்கள்!

நிகழ்த்திய சில அற்புதங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டனர்.



• வி. வாசுதேவன்



• அரங்கநாதன்:

**டி.பி. பாலசுப்ரமணியன்:** புட்டபர்த்தி சென்றிருந்த ஒரு பக்தர், புதுமையான பேனா ஒன்றை என் மனைவிக்குக் கொடுத்திருந்தார். அதைப் பிரஸ் செய்தால், பேனாவின் உடலில் பாபாவின் பொன் மொழிகள் தோன்றும். அதைப் பார்க்கவே எல்லோரும் கூடத்தில் கூடியிருந்தோம். அப்போது சமையலறையிலிருந்து 'டமார்' என்று திடீர் சத்தம். ஓடிச் சென்று பார்த்தால், குக்கர் வெடித்துச் சிதறியிருந்தது. குக்கருக்கு நேர்ந்த கதியைப் பார்த்தபோது எல்லோருக்கும் உடல் நடுங்கியது. மனைவியும் குழந்தைகளும் வழக்கமாகச் சமையலறையில் இருந்திருக்க வேண்டிய நேரம் அது. தோன்றாத் துணையாக எங்கும் நிறைந்திருக்கும் சாய்பாபாவின் பெருங் கருணையே, பொன்மொழிப் பேனாவை அனுப்பி சமையலறையிலிருந்து என் குடும்பத்தைக் காத்தது. அன்றுமுதல் ஆண்டுதோறும் புட்டபர்த்தி சென்று சுவாமியை தரிசனம் செய்வதோடு, அங்கே ஒருவாரம் தங்கியிருந்து இயன்ற தொண்டும் செய்து வருகிறோம்.




**வி. வாசுதேவன்:** பத்தாம் வகுப்பு முடித்த பிறகு பாபாவின் ஒயிட் பீல்டு பள்ளியில் சேர்ந்து படித்தேன். பின்னர் எம்.பி.ஏ பாபாவின் அறுபதாவது பிறந்த நாளில் நடந்த நாடகத்தில் ஆதி சங்கரராக நடிக்கும் வாய்ப்பை பாபா எனக்குக் கொடுத்தார்கள். எனக்கு நடிக்க வரவில்லை. உன்னால் முடியும் என்று பாபாவே பயிற்சி கொடுத்தார். அவரே காஸ்ட்யூம் போட்டுவிட்டார். நாடகம் தொடங்க சில நிமிடங்கள் வரை நடுங்கிக் கொண்டிருந்த நான் கடவுள் கையில் ஒரு பொம்மைபோல் ஆனேன். நாடகம் முடிந்ததும் வாசுவா இப்படி நடித்தது என்று எல்லோரும் தழுவிக் கொண்டார்கள். பிரமித்தார்கள். பாபா மட்டும் அமைதியாகச் சிரித்தார்.

**அரங்கநாதன்:** அது 1974ஆம் வருடம். என் மனைவியோ பாபாவின் பக்தை. எனக்குப் பாபாவை பிடிக்காது. மனைவிக்காக புட்டபர்த்தி புறப்பட்டோம். ஆசிரமம் சென்றதும் தரிசனத்துக்காக காத்திருந்த பக்தர்களோடு அமர்ந்தோம். பாபா வந்தார். என்மனைவி, பிள்ளைகளுக்கு ஆசீர்வாதம் தந்தவர், என்னைப் பார்த்து ஒரு மர்ம புன்னகை செய்துவிட்டுப் போய் விட்டார். கொஞ்ச நேரத்தில் பக்கவாதத்தால் பாதிக்கப்பட்ட பெங்காலி டாக்டர் ஒருவரை வீல் சேரில் அமர்த்தி தள்ளி வந்தனர். பாபா மீண்டும் வந்தார். அவரை வீல் சேருடன் உள்ளே தள்ளிச் சென்றார். சிறிது நேரத்தில் பக்கவாதத்தால் பாதிக்கப்பட்டவர் கையிரண்டையும் தலைக்குமேல் குவித்து வணங்கியபடி மெல்ல மெல்ல நடந்து வந்தார். அப்போதே சாய்ராம் என்று என் வாய் கதறியது.

• புவனேஸ்வரி சேதுராமன்

**புவனேஸ்வரி சேதுராமன்:** காஸ் சிலிண்டர் வெடித்து மைத்துனரின் முகம் கருகி விட்டது. அவரை கீழ்பாக்கம் மருத்துவ மனையில் சேர்த்தோம். சென்னையிலிருந்து, நடந்தே புட்டபர்த்தி செல்லும் ஊதுபத்தி வியாபாரி ஒருவர் மருத்துவமனைக்கு வந்து, இங்கு யாரேனும் காஸ் சிலிண்டர் வெடித்து சிகிச்சைக்கு வந்திருக்கிறார்களா என்று விசாரித்து அவருக்குத் திருநீறு கொடுத்து விட்டுச் சென்றார். இன்னொரு பக்கம் வீட்டுப் பூஜை அறையில் இருந்த பாபாவின் உருவப் படத்தில், அவரது முகம் கறுப்பு நிறமாக மாறியிருந்தது. எனது மைத்துனர் குணமாக குணமாக, பாபாவின் முகமும் மாறிக் கொண்டே வந்ததை, பஜனைக்கு வந்த எல்லோரும் பார்த்து ஆச்சர்யப்பட்டார்கள்.

சந்திப்பு: **ஜெயன்**
படங்கள்: **வெங்கடேஷ்**




# LIFE IS TOO WONDERFUL TO BE SPENT WORRYING




**PROMOTERS**

Nicco Group

UCO Bank

IFC - Washington
(a world bank affiliate)

Nicco Uco Alliance Credit Ltd is part of the Rs. 600 Crores NICCO Group. This Company is one of the leading Non Banking Finance Company in India.

The Company is Primarily engaged in the business of Hire Purchase & Leasing having its Head Office in Calcutta and the Southern Divisional Office based at Chennai.

Nicco Uco Alliance Credit Ltd is the only NBFC in India having the ISO 9001 certification for all its products & services. The Company is a serious and committed player in the NBFC sector with a record of uninterrupted dividend payments since inception.

**ASSOCIATE COMPANIES**

NICCO HELIFOSION LTD
WEBEL NICCO ELECTRONICS LTD
NICCO PARKS & RESORTS LTD

| PERIOD | NON-CUMULATIVE DEPOSIT SCHEME - A | | | | CUMULATIVE DEPOSIT SCHEME - B | |
|---|---|---|---|---|---|---|
| | Monthly | Quarterly | Half-yearly | Annualy | Interest Rate | Effective Annual Yield |
| 12 Months | 12.00 % | 12.00 % | 12.50 % | 13.00 % | 13.00 % | 13.00 % |
| 24 Months | 12.50 % | 12.50 % | 13.00 % | 13.50 % | 13.50 % | 14.41 % |
| 36 Months | 13.00 % | 13.00 % | 13.50 % | 14.00 % | 14.00 % | 16.05 % |
| 60 Months | 14.00 % | 14.00 % | 14.50 % | 15.00 % | 15.00 % | 20.23 % |
| Minimum Amount (Rs.) | 15000 | 10000 | 10000 | 10000 | 5000 | |

| PERIOD | MONEY MULTIPLIER - SCHEME - C | |
|---|---|---|
| | Minimum Deposit Rs. | Maturity Value Rs. |
| 37 Months | 10000 | 15000 |



## NICCO UCO ALLIANCE CREDIT LTD.

Regd. Office : NICCO House, 2, Hare Street, Calcutta 700 001.
Tel : 248-5102 (6 Lines). Fax : (91) 33 2430783

**Southern Divisional Office : Aalim Centre, 3rd Floor, 82, Dr. Radhakrishnan Salai Chennai 600 004. Phone : (044) 8112446 / 8113548 / 8111651 Fax : (044) 8111959.**

Branches :

Bangalore ✆ 5589004 • Calicut ✆ 720456 • Cochin ✆ 361389 • Coimbatore ✆ 432376 • Hyderabad ✆ 3233806
Madurai ✆ 630251 • Mettur ✆ 22815 • Mumbai ✆ 3723448 • Namakkal ✆ 32235 • Nasik ✆ 501807
New Delhi ✆ 4651586 • Salem ✆ 448120 • Trichy ✆ 761168 • Tuticorin ✆ 327407 • Vellore ✆ 223008 • Vijayawada ✆ 483904

The Statutory Advertisement published in The Telegraph and Ananda Bazar Patrika on 27.9.2000.

> "எம்.ஜி.ஆருடன் இருப்பதாக முரசொலியில் பிரசுரிக்கப்பட்டவர்களின் உண்மையான புகைப் படங்களை சோதித்துப் பார்த்து அவை 'ஒட்டு வேலை' என்று அறிக்கை கொடுத்தேன்."

# தப்பித்தார் சுவாமி!

'தடா' ரவியுடன் சுப்பிரமணியம் சுவாமி இருப்பது போல வெளியிடப்பட்டுள்ள படத்தின் ஒரிஜினல் தன்மை பற்றி தங்களுக்குச் சந்தேகம் இருப்பதாகவும் அதை ஆராய்ந்து பார்த்து கருத்து சொல்லுமாறும் சந்திரலேகா விடமிருந்து எனக்குக் கடிதம் வந்தது.

முதலில் பிரச்னைக்குரிய அந்தப் படத்தைக் கம்ப்யூட்டரில் போட்டுப் பார்த்தேன். ரவியின் தலையில் துளிகூட பிசிறில்லாமல் ஏதோ கோழி முட்டை போல ஒழுங்காக 'கட்' செய்து ஒட்டியிருப்பது மிகத் தெளிவாகத் தெரிந்தது. மேலும் மைக்ராஸ் கோப்பில் வைத்துப் பார்த்ததில் ரவியின் கழுத்துப் பகுதியில் ஒட்டிய இடங்கள் போக மீதி பிசிறு தட்டிய இடங்களை மறைக்கக் கறுப்பு இங்க் கொண்டு டச்சப் செய்திருப்பது தெரிந்தது. எந்தச் சட்டை காலரும் 'V' வடிவத்தில் இருக்காது. ரவியின் படத்தில் தெளிவாக இரு நேர்க் கோடுகளை ரவியின் சட்டைக்குப் பதில் வரைந்திருப்பது தெரிந்தது. அந்தச் சமயத்தில் ஒரு பத்திரிகையில் வந்த ரவியின் மற்றொரு படத்தையும் சுவாமியின் பக்கத்தில் இருந்த ரவியின் படத்துடன் ஒப்பிட்டுப் பார்த்ததில் ஹேர் ஸ்டைல் வித்தியாசம் தெளிவாகத் தெரிந்தது. தனித்தனி படங்களைக் கத்தரித்து ஒட்டியிருக்கிறார்கள். புகைப்படத்தில் grain எனப்படும் புள்ளிகள் மிகவும் வித்தியாசப்பட்டன. சுவாமியின் முகத்தில் துல்லியமாகக் காணப்பட்ட புள்ளிகளை இருபது மடங்கு பெரிதாக்கிப் பார்த்தபோது அவை மற்ற இருவர் முகத்தில் இருக்கும் grainகளை விட மாறுபட்டு இருப்பது தெரிந்தது. சுவாமியின் தோள் பட்டைப் பகுதிகளில் ஜிப்பாவின் அவுட் லைனில் தெளிவாகக் கையால் வரையப்பட்டிருந்தது தெரிந்தது. வெவ்வேறு ஃபிலிம்களில் எடுக்கப்பட்டதால் புகைப்படத்தின் ஸ்பீட் வித்தியாசப்பட்டது. இந்த மூன்று படங்களும் வெவ்வேறு கால கட்டத்தில் எடுக்கப்பட்டவை என்பதும் புரிந்தது. இந்த வேலையைச் செய்தவர் ஒரு கத்துக்குட்டி ஃபோட்டோ கிராபராகத்தான் இருக்க முடியும் என்பது என் அழுத்தமான கருத்து. வெட்டி ஒட்டும்போது சுவாமியின் இடதுபக்கக் காதை சற்று சிதைத்து விட்டார் அவர்! இப்படிப் பல்வேறு வகைகளில் பார்த்தபோது தடா ரவியுடன் சுவாமி இருக்கும் படம் போலியாகத் தயாரிக்கப்பட்ட படம் என்பது பளிச்சென்று விளங்கியது.

சுவாமியின் பட விவகாரத்தை ஆராய்கையில் வேறு ஒரு விஷயமும் என் நினைவுக்கு வந்தது. எம்.ஜி.ஆர். அமெரிக்காவில் சிகிச்சை



17
தடய அறிவியல் நிபுணர்
டாக்டர் பி. சந்திரசேகரன்

பெறும்போது பல அ.தி.மு.க தலைவர்கள் எம்.ஜி.ஆருடன் இருப்பது போன்று 'எடுக்கப்பட்ட' புகைப்படங்கள் வெளியாகின. அவற்றைக் கிண்டலடிக்கும் விதமாக எம்.ஜி.ஆருடன் அவருக்குச் சம்பந்தமில்லாதவர்களை அருகே நிற்க வைத்து 'முரசொலி' பத்திரிகை சில படங்களையும் பிரசுரம் செய்தது. இவற்றை அன்றைய அ.தி.மு.க அரசு சீரியஸாக எடுத்துக்கொண்டு தடய அறிவியல் துறையைக் கொண்டு பரிசோதிக்கச் சொன்னது. அப்போது நான், எம்.ஜி.ஆருடன் இருப்பதாக முரசொலியில் பிரசுரிக்கப்பட்டவர்களின் உண்மையான புகைப்படங்களைச் சோதித்துப் பார்த்து அவை 'ஒட்டு வேலை' என்று அறிக்கை கொடுத்தேன். அப்போது செய்தது போன்றே தடா ரவி, சுவாமி படத்தையும் 'போலிப்படம்; ஒட்டு வேலை செய்து தயாரிக்கப்பட்டது' என்று அறிக்கை கொடுத்தேன். எனது அறிக்கை மீடியாவில் பெரிய அளவில் வெளிவந்தது.

இதற்கிடையில் தடா கோர்ட்டில் பதிவு செய்யப்பட்ட வழக்கின் அடிப்படையில் சுவாமியை கைது செய்ய வேக, வேகமாக நடவடிக்கை எடுத்தது தமிழக அரசு. அப்போது சுவாமி, கேபினட் அந்தஸ்து பொறுப்பில் இருந்தார். தில்லியிலேயே, மத்திய அரசின் பாதுகாப்பில் அவர் இருந்ததால் ஜெயலலிதா அரசின் முயற்சி எடுபடவில்லை. படம் போலி என்று பரவலாக பொதுஜன அபிப்ராயம் உருவான காரணத்தால் அ.தி.மு.க அரசு "என்ன செய்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டு இருந்தது. அந்த நிலையில் 'தடா' சட்டமும் முடிவுக்கு வந்துவிட்டபடியால், சுவாமியைத் தடாவில் கைது செய்யும் எண்ணத்துக்கு இறுதி அடி விழுந்தது. சரியான சமயத்தில் விஞ்ஞானபூர்வமாக எனது அறிக்கை வெளி வந்தது சுவாமிக்குப் பெரிதும் உதவியாக இருந்தது. அவர் தடாவில் உள்ளே சென்றிருந்தால் அவரது உயிருக்கும் ஆபத்து உண்டாக்கியிருக்கக்கூடும் என்பதுதான் அன்றைய நிலை.

**சு**வாமி பட விவகாரத்தை ஆராய்ந்த போது எனக்கேற்பட்ட அனுபவம் வித்தியாசமானது. 'நான் ஏதோ செய்கிறேன்' என்பது போலீஸுக்குத் தெரிந்துவிட்டது. என் தொலைபேசியை ஒட்டு கேட்பதும், என் நடமாட்டத்தைக் கண்காணிப்பதும் நடந்தன. நான் ரகசியமாகப் பெங்களூருக்குச் சென்று சில சோதனைகளைச் செய்து பார்க்க வேண்டி வந்தது. எனது அறிக்கை வெளி வந்ததும் ஒரு அ.தி.மு.க அமைச்சர் எனக்குப் போன் செய்தார். "சுவாமி ரவியோடு இருக்கும் படத்தின் நெகட்டிவைக் கொடுத்தால் 'அசல்' படமென்று ஒப்புக் கொள்வீர்களா?" என்று கேட்டார் அவர். "அதெப்படி ஒப்புக் கொள்ள முடியும். படமே போலி என்றால் நெகட்டிவ் மட்டும் ஒரிஜினலாகி விடுமா?" என்றேன் நான். படக்கென்று ஃபோனை வைத்து விட்டார் அவர். இந்த நிலையில் எனக்குத் திடீரென்று துப்பாக்கி ஏந்திய காவலர்கள் பாதுகாப்பு கொடுக்க வீட்டிற்கு வந்தனர். "எனது உயிருக்கு ஆபத்து" என்று போலீஸுக்கு ரகசியத் தகவல் வந்ததால்தான் 'பாதுகாப்பு' என்று கேள்விப்பட்டேன். அடிதடி அரசியலுக்குப் பெயர் போன மாஜி மந்திரி ஒருவர் தனது அடியாட்களிடம் என்னைக் கொஞ்சம் 'கவனிக்குமாறு' சொன்னது போலீஸ் காதில் விழுந்துவிட்டது என்றார்கள். ஆனால் எனக்குப் பாதுகாப்பு கொடுத்தது, அப்போதைய முதல்வருக்கு கொஞ்சம் எரிச்சலைத் தோற்றுவித்ததாம்.

"ராஜீவ் காந்தி கொலையில் மிக முக்கியமான சாட்சி மட்டுமல்லாமல் புகழ் பெற்ற தடய அறிவியல் நிபுணர். அவருக்கு ஏதாவது ஆபத்து என்றால் அரசுக்குப் பெரிய அவமானம்" என்று பாதுகாப்பு காரணத்தைச் சொல்லி போலீஸ் டி.ஜி.பி முதல்வரை கன்வின்ஸ் செய்ய வேண்டியிருந்ததாம். தடய இயல் அடிப்படையில் போலி படம் என்று நிரூபித்து சுவாமியைப் பெரிய இக்கட்டிலிருந்து காப்பாற்றினாலும், அந்தப் புகைப்படத்தைப் பற்றிய மர்மங்கள் இதுவரை வெளிவரவில்லை. முக்கியமாக 'தடா' ரவிக்கு இந்தப் படத்தைத் தயாரித்துக் கொடுத்தது யார்? என்ற விவரம் வெளியாகவில்லை. அன்றைய ஆளும் கட்சியைத் திருப்தி செய்ய போலீஸ் இப்படியொரு வேலையில் ஈடுபட்டு கையைச் சுட்டுக் கொண்டதாகப் பத்திரிகைகள் கருத்துக்கள் வெளியிட்டன. என்னைப் பொறுத்தவரை என் கைக்காசு செலவழித்து நான் ஆராய்ச்சி செய்தேன். இது தவிர ஆளும் கட்சியின் பயமுறுத்தல்கள் வேறு. **ஆனால் சுவாமி எனக்குத் தர வேண்டிய கட்டணத்தை இதுவரை தரவில்லை.** நிறைய நினைவூட்டல் கடிதங்கள் அனுப்பியும், ஒரு பலனுமில்லை.

**வி**ஞ்ஞானம் வளர, வளர குற்றம் செய்பவர்களும் அந்த வளர்ச்சியின் உதவி கொண்டு பல்வேறு தில்லுமுல்லுகளில் ஈடு




நாளை என்பது நம் கையில் இல்லை; நல்லவை நினைத்தால், அக்கணமே அவற்றை செய்யத் தொடங்குக.
— பாபாவின் அமுதமொழி





• அந்த 'ஓட்டுவேலை' படம்

படுகிறார்கள். இதனால் தடய அறிவியல் நிபுணர்கள் மிகவும் உஷாராக இருக்க வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். ஃபாக்ஸ் எனப்படும் தொலைநகல், முன்னேற்றத்தின் ஒரு அடையாளம். அந்த ஃபாக்ஸ் உதவியோடு தில்லுமுல்லு செய்த ஒருவரை அடையாளம் காட்டிய வழக்கு மறக்க முடியாது. திருச்சியில் கல்கி ஜுவல்லரி என்ற பெரிய நகைக்கடை இருக்கிறது. அதன் உரிமையாளர் ராமகிருஷ்ணன். இந்த நகைக்கடைக்காரர்கள், நகைகள் செய்து அவற்றைச் சிங்கப்பூருக்கு எடுத்துச் சென்று விற்று விட்டு வருவார்கள். சிங்கப்பூரில் அவரிடம் நகை வாங்கிக் கொண்டிருந்தவரும் தமிழர்தான்.

ஒருமுறை சுமார் ஒரு கோடி மதிப்புள்ள நகைகளை விற்பனைக்குக் கொடுத்தார் ராமகிருஷ்ணன். அந்த விற்பனைக்கான பணம் நீண்ட நாட்களாகியும் வரவில்லை. "ஏன் இவ்வளவு தாமதம்?" என்று விசாரித்தபோது "நகைகளை நீங்கள் திருப்பி வாங்கிக்கொண்டு போய் விட்டீர்களே அப்புறம் எதற்கு பணம்?" என்று பதில் வந்தது. ஆடிப் போய் விட்டார் ராமகிருஷ்ணன். "நான் எப்போது வாங்கிப் போனேன்?" என்று கேட்டார் ராமகிருஷ்ணன். "நீங்கள் நகைகளை வாங்கிக் கொண்டு போனது மட்டுமல்லாமல், திருச்சிக்குச் சென்று அங்கிருந்து மூன்று இன்வாய்ஸ்களில் (invoice) தனித் தனியாக "received the jewels back" என்று கையெழுத்திட்டு ஃபாக்ஸில் அனுப்பியும் இருக்கிறீர்களே" என்று சிங்கப்பூரில் இருந்து பதில் வந்தது. இந்தப் பதிலையடுத்து "நகைகளை வாங்கிக் கொண்டு பணம் கொடுக்காமல் ஏமாற்றியதாக சிங்கப்பூர் கோர்ட்டில் வழக்குப் போட்டார் ராமகிருஷ்ணன். வழக்கு விசாரணைக்கு வந்தது. "நகைகளை வாங்கிக் கொண்டதாக ராமகிருஷ்ணன் கையெழுத்திட்டு ஃபாக்ஸில் அனுப்பியதாகச் சொல்லப்பட்ட மூன்று இன்வாய்ஸ்களின் ஜெராக்ஸ் காப்பிகளையும் கோர்ட்டில் சமர்ப்பித்தார் சிங்கப்பூர்காரர். "அனுப்பியதாகச் சொல்லப்படும் தொலைநகலுக்குப் பதில் அவற்றின் ஜெராக்ஸ் காப்பிகளைச் சமர்ப்பிப்பது ஏன்?" என்று ராமகிருஷ்ணனின் வழக்கறிஞர் கேட்டபோது, "தொலைநகலில் வருபவை சில காலத்திற்குப் பிறகு மங்கி மறைந்து போய் விடும். எனவே அதை ஜெராக்ஸ் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். அப்படித்தான் இந்த இன்வாய்ஸ்களையும் ஜெராக்ஸ் எடுத்து வைத்து இருந்தோம்" என்று பதில் சொன்னார் சிங்கப்பூர் தமிழர். கோர்ட்டில் ராமகிருஷ்ணனிடம் அந்த ஜெராக்ஸ் இன்வாய்ஸ்களைக் காட்டி, "நகைகளைத் திரும்பப் பெற்றுக் கொண்டேன் என்று எழுதி கையெழுத்திட்டது நீங்கள்தானா?" என்று கேட்டார்கள். ராமகிருஷ்ணனுக்குத் தலை சுற்றல். காரணம், "Received the Jewels back" என்று எழுதியிருந்தது அவர் கையெழுத்தல்ல; ஆனால் கையொப்பம் அவருடையது போலத்தான் இருந்தது. "நகைகளை திரும்பப் பெற்றுக்கொண்டால் நான் சிங்கப்பூரிலேயே கையெழுத்து போட்டு விட்டுச் சென்றிருப்பேன். இது போல ஃபாக்ஸில் அனுப்ப மாட்டேன்" என்று சொன்னார் அவர். சிங்கப்பூர் கோர்ட் அவருடைய வாதத்தை ஏற்றுக் கொள்ளவில்லை; "கையெழுத்து உங்களுடையது போலத்தான் இருக்கிறது என்று சொல்கிறீர்கள். எனவே வழக்கை தள்ளுபடி செய்கிறோம்" என்று சொல்லிவிட்டது அந்தக் கீழ்கோர்ட். ஒரு கோடி ரூபாய் அம்பேல்தான் போலிருக்கிறது என்று நொந்து போய்விட்டார் ராமகிருஷ்ணன்.

(தொடரும்)



வேலாயி, நாகப்பன் வீட்டு வாசலுக்கும் வந்து நின்றாள். பாதங்களில் ஈரப் பிசுபிசுப்பு. கணுக்கால் வரை ஏறியிருந்த சேலையில் பிழிந்தெடுக்கும் நனைவு.

புல் கத்தைகள் தோள்கள் இரண்டிலும் மெத்தென்று விழுந்து அழுத்தின. கொடி தளர்ந்து உடம்பு முழுக்க பொலபொலவென்று உதிர்ந்து விடுமோ என்று அஞ்சினாள்.

''புல்லுக்கட்டுக் கொண்டாந்திருக்கேய்யா.... வலுத்த சொம... வாங்கிப் போடுங்க... ஒரு தடவைக்கு நாலு தடவை அள்ளிப் போடலாம். அம்புட்டுக் கனதி....''

அது மூன்றாவது வீடு. முதல் இரண்டு வீடுகளின் மறுதலிப்பே அங்கும் நிகழும் என்கிற உள்பதற்றமும் அவளுள் இருந்தது. என்றாலும் அலைந்து வாங்குவதற்குப் பதிலாகத் தேடி வந்திருக்கிறாள் என்று ஒரு விலைக்கு வாங்கிப் போடுவான் என்கிற நம்பிக்கையும் எழுந்தது.

நாகப்பன் அவளது பேச்சைக் காதில் வாங்கியபடியே வந்தான்.

பக்கவாட்டில் ஆஸ்பெஸ்டாஸ் வேய்ந்த தொழுவம். தாயும் கன்றுமாய் இரண்டு ஜோடி மாடுகள் ஈரப் புல்லைத் தின்று கொண்டிருந்தன. கட்டுத்தரை நசநசத்துக் கிடந்தது.

''என்ன வேலாயி... புல்லுக் கட்டாக்கும்?...'' அலட்சியக் கேள்வியுடன் நிலைப்படியில் தலை உரச நின்றான் நாகப்பன். அவளுக்கு விசுக்கென்று போனது. புளிச்ச ஏப்பக்காரனிடம் பசி ஏப்பக்காரன் மாட்டிக் கொண்ட உணர்வு.

''ஆமங்கய்யா... இன்னிக்குக் கொஞ்சம் லேட்டாயிருச்சு. மந்தையில காத்திருந்தேன்... மழைத் தண்ணிக்குப் பயந்துக்கிட்டு ஒருத்தரும் வரல போலயிருக்கு... மகராசங்க நல்லாருக் கட்டும்னு தூக்கியாந்தேன்...''

அவள் சுமையை இறக்கவில்லை. அவனது ஆதரவான வார்த்தைகளுக்காக நின்றாள்.

பொதுவாகவே மந்தையில் விலை தீர்ந்தாலும் சம்சாரிகளின் வீடுகளுக்குச் சுமந்து சேர்க்க வேண்டும் என்கிற எழுதப்படாத விதி இருந்தது.

அவளது அன்னியோன்யமான பேச்சை உதாசீனம் செய்கிற முகபாவத்துடனேயே நாகப்பன் நின்றான். ''நைட்டுப் பொழுதுக்குத் தீவனம் சரியாப் போச்சு வேலாயி... அந்தா பாரு கொட்டத்துல எப்புடிக் கெடக்குன்னு... இதுக்கு மேல ஒரு பிட்டு வாங்கிப் போட முடியாது. அப்புறம் சாணி மூத்திரத்தில விழுந்து பூராம் குப்பைக்குத்தேம் போகும்...''

''சும்மா இப்புடி வெளிய கூடப் போட லாங்கய்யா... நம்ம புல்லு மழைத்தண்ணிக்கும் நனஞ்சாலும் ஒண்ணுஞ் செய்யாது... வெறும் மத்தாங்காப் புல்லு... ஒரு அருகு இல்ல... கொல கொம்பு இல்ல... சும்மா மாடுக வளச்சு மாட்டும்... பாலும் ஒட்டிக்கு ரெட்டியா வரும்...'' வேலாயி தவிக்கத் தவிக்கச் சொன்னாள்.

''நாஞ் சொன்னது ஓங்காதுல ஏறல போல்ருக்கு... இந்தா கெடக்குற ரெண்டு கட்டுக்கே கடஞ் சொல்லி விட்ருக்கேன்... சரி... நீயும் பாவம்... வந்தது வந்துட்டே... இனிமே இந்த மழைல எங்கெங்க தூக்கிட்டு அலைவ.... போட்டுட்டுப் போ.... ஒனக்கும் ஒரு பதினஞ்சு ரூவா நாள மய்க்கா நாளு தர்றேன்...''

சும்மாவே ஏழு நட்டணை பண்ணுகிறவன் நாகப்பன். மந்தைக்கு வந்தால் இச்சி மர நிழல் விரிப்பில் கிடையாய்க் கிடப்பான். சுதிகலங்கச் செய்கிற போக்குவரத்து நிறைந்த சாலையின் ஓரக்காலில் அந்த மரம்.

**அல்லி உதயன்**



# பச்சை

துண்டை விரித்துப் படுக்கத் தூண்டுகிற விரிவு. தார் ரோட்டின் விளிம்பு வரை புற்கட்டுகள் வந்து விழும். காலை ஒன்பதுக்குத் துவங்கினால் நண்பகல் பன்னிரண்டு மணிவரை ஒன்றன் பின் ஒன்றாக வந்து கொண்டிருக்கும். அப்புறம் சாயங்காலம்தான்.

பத்து மைல் சுற்றளவுக்குத் தோட்டங்கள் வயல் வெளிகள், மலையடிவாரம் என நடையாய் நடந்து வந்து சேர்ப்பவர்கள் அலுப்பாய் நின்றிருப்பார்கள். அவர்களின் உழைப்பின் கடுமையையும், உணர்வுகளையும் மதிக்கிற விதத்தில் நாகப்பனின் அணுகுமுறை இருக்காது. ஐம்பது கட்டுக்கள் வந்திருந்தால் நாற்பதிலாவது அவன் கை விழுந்திருக்கும். அங்கொன்றும் இங்கொன்றுமாய் விலை திகைந்து தூக்கிப் போகிற கட்டுகளெல்லாம் நாகப்பன் கழித்துக் கட்டியதாகவே இருக்கும். உருட்டுவான்; புரட்டுவான்; தூக்கிப் பார்ப்பான். அடிப்புல்லைக் கொத்தாகப் பற்றி இழுத்துப் போடுவான். ஒரே புல்லாக இருக்கிறதா; பல புல் கலந்திருக்கிறதா என்பதற்காகவே அது. என்றாலும் அவன் கட்டுகளுக்குப் பக்கம் வந்தாலே சுமைகாரர்களுக்கு அடி வயிற்றில் புளியைக் கரைத்துவிடும்.

நாலும் தெரிந்தும் நாகப்பனைத் தேடி வந்திருக்கிற தன் புத்தியைச் செருப்பால் அடிக்க வேண்டும் என்று நொந்து கொண்டாள். கட்டுடன் திரும்பினாள்.

**நா**ராயணசாமியின் வாஞ்சையான முகம் திடுமென மனத்தில் பூத்துப் போனது. ஈரக் கொதகொதப்பில் நம்பிக்கை ஊன்றுகோல் கிடைத்தது. கால் பெருவிரல்களை உறுதியாக ஊன்றி வழுக்கல்களை எதிர்கொண்டு முன்னேறினாள். எடுத்த எடுப்பில் அவர் ஏன் நினைவுக்கு வராமல் போனார் என்றிருந்தது. தூரந் தொலைவான நடைக்கு அஞ்சியே அவரது ஞாபகம் விடுபட்டிருக்க வேண்டும் என்று நினைத்தாள்.

எப்போதுமே நாகப்பனுக்கு நேரெதிரானவர் நாராயணசாமி. இச்சி மர நிழல் பார்த்து அவரது சைக்கிள் வரும் போதே பெண்கள் முகம் மின்னத் துவங்கி விடும். நான் முந்தி நீ முந்தி என்று கட்டுகளுக்கான அழைப்பு

கள் சூழ்ந்து விடும்.

"விலையக் கொஞ்சம் பாத்து சொல்லுங்க..." என்பார்.

இந்தப் பேரமெல்லாம் பத்துப் பதினைந்து நிமிஷங்களில் முடிந்து போகும். வந்த சுவடு தெரியாமல் போய் விடுவார் நாராயணசாமி. வேலாயி அவர் வந்ததும் தென்படும்படியாகக் கட்டு இறக்கப் பிரயாசைப்படுவாள். பல நேரங்களில் அது வாய்த்தது. வாடிக்கைக் கட்டு என்று சொல்லும்படியாகக் கூட அவளது நிலை இருந்தது. அந்த உரிமையில் வீட்டுக்கே கொண்டு போட ஆரம்பித்தாள். நாராயணசாமியின் சம்சாரம்தான். "நீங்க என்ன மொண்டியா மொடமா? போயி மந்தையில பாத்து நல்ல தாத் தூக்கிட்டு வாங்க'ன்னு ஒரு விரட்டு விரட்டினாள். வாடிக்கை விட்டுப் போனது.

தெருக்களில் மலைச் சரிவு போல் நீர்க் கோடுகள் இறங்கிக் கொண்டிருந்தன. செம்மண் கரைத்து ஊற்றினாற் போல் கவுளி கவுளியாகப் பிரிந்து சாக் கடையிலும் பள்ளங்களிலும் சேர்ந்தது.

சாயங்காலமானால் சரியாக வந்து தொலைக்கிற மழை. வாரக் கணக்கில் வதைத்துக் கொண்டிருக்கிறது. காலை நேரங்களில் கொஞ்சம் இளைப்பாறுகிறது. என்றாலும் சேறும் சகதியுமான வயல் வரப்புகளில் இறங்கி ஈரப்புல்லைக் கூட்டிப் பிடித்து அறுப்பது குடுமியை அறுப்பது போல் கடினமான வேலை. நசநசப்பில் கட்டுச் சேர்த்துத் தூக்குவதற்குள் போதும் போதும் என்றாகி விடும். நீர் கோத்து ஒரு ஆள் சுமையை ரெண்டாள் தூக்கி வருகிற அவஸ்தையைக் கொடுக்கும். விண்விண்ணென்று கழுத்து நரம்புகள் புடைக்கும். ஒரேயடியாக ஒருநாள் சடக்கென்று ஒடிந்து போகும். அப்படி நடந்தால் நிம்மதிதான். புள்ளை குட்டிகளுடன் இழுபடுவதிலிருந்து ஒரு முடிவு ஏற்படும்.

புருஷன் இருந்தும் இல்லை என்றாகி விட்டது. ஒரு நாள் விட்டு ஒரு நாள் என்று இருந்தவன் இப்போது ஒரேயடியாய் கூத்தியாளே கதி என்றாகி விட்டான். அவன் இருந்த அளவில் அவனது கல்லுடைப்பு வரும்படி அஞ்சுக்கு ரெண்டு பாதகமில்லாமல் வந்தது. இப்போது ஒரு சம்பாத்யம்தான். தலைவலி, காய்ச்சல் என்று படுத்தால் அதுவும் இல்லை. ஒரு வேளை கூழ் குடிக்கும் பிள்ளைகள். பிறகு பட்டினிதான்.

கடுங்கோடையில் துருவித் துருவிப் பார்த்தாலும் அறுக்கப்புல் இருக்காது. கிணற்றடித் தோட்டங்களில் அறுக்க வேண்டுமெனில் ஓசியாகத் தண்ணீர் கட்டச் சொல்வார்கள். அதற்கும் போட்டி இருக்கும். அந்த நொம்பளத்திற்குக் கூலி வேலைகளுக்கே போய் விடலாம். ஆனால் கொடுக்கத்தான் ஆள் இருக்காது. புல்லறுத்துப் பிழைப்பவர்கள் ஒப்பந்தமாய் ஒரு வேலைக்கு வர மாட்டார்கள் என்று சம்சாரிகள் ஆர்வம் காட்ட மாட்டார்கள். அப்போதெல்லாம் விறகு வெங்கலி பொறுக்க மலை யேறினால்தான் ஆயிற்று.



"எதுக்கு நம்ப பையன் அழறான்?"
"சும்மா ஒரு மனுஷ கதை சொன்னேன். ரொம்ப பயந்துட்டான்!"
- வே. செந்தில் குமார்

நாராயணசாமியின் வீட்டுத் தெருவில் நுழைந்தாள் வேலாயி. சாரலுமற்று வானம் வெளிவாங்கத் துவங்கியது. இப்படியே ஒரேயடியாய் மழை உள்வாங்கி வானம் நிர்மலமாகி விட்டால் பேச்சிக்குக் காய்ச்சல் குறைந்து விடும். மூன்று நாள் தர்மாஸ்பத்திரி கவனிப்பு எடுபடவில்லை. வெள்ளை மாத்திரைகளும் நொறுக் நொறுக்கென்று சதை பிளந்து உள் நுழைகிற ஊசிகளும் ஆறு வயதுப் பிஞ்சை அலங்கோலப்படுத்தியிருக்கிறது.

இரவு எத்தனை நேரமானாலும் தனியார் ஆஸ்பத்திரியில் பூப் போல ஒரு ஊசி போட வேண்டும். எல்லாம் சரியாகி விடும். அதற்களவாக இப்போது இருபது ரூபாய் வேண்டும். நாராயணசாமியிடம் சேர்த்துக் கொஞ்சம் கிடைத்தால் பிள்ளைக்குப் பாலும் பன்னும் வாங்கித் தரலாம். மாத்திரை மருந்துக்கு டாக்டர் எழுதிக் கொடுத்தால் தோதுவாது பார்த்து வாங்கிக் கொள்ளலாம்.

மழை முடிந்த தெருவில் ஜனங்கள் பிரியமாய் இறங்கத் துவங்கியிருந்தார்கள். குடைகளற்றுப் பலர் நடந்து போனார்கள். அதில் ஒருவர், 'இந்தப் புல் என்ன விலை?' என்று கேட்டு விடக் கூடும் என்று எதிர்பார்த்தாள். வீடுகளையும் மனிதர்களையும் உரசிகிற

விதத்தில் அவளது நடை இருந்தது. ஈரமாய் வருகிற பச்சைக்குச் சிலர் அவசரமாய் ஒதுங்கிப் போனார்கள்.

முக்கால் வாசி, பால் மாடுகள் வைத்திருக்கும் வீடுகள்தான். பெரும்பகுதிப் பேர் சொந்த நிலங்களில் சீமைப்புல் வளர்த்தார்கள். தட்டை தாள் போட்டிருந்தார்கள். எனினும் வெளிப் புல் தேவைகள் இருந்து கொண்டுதான் இருந்தன. எல்லாவற்றிற்கும் மேலாக வைக்கோற் படப்புகள் ஒரு ஓரத்தில் வைத்திருக்கவே செய்தார்கள். மழைக்காலத்தில் அதுதான் வசதி. ஈரப் புல்லைக் கழிக்கிற மாடுகள் வைக்கோலை மொறுமொறுப்பாக மென்று இறக்கும்.

வீட்டுத் தாழ்வாரங்களிலிருந்து இருள் இறங்கி வந்தது. நாராயணசாமியின் வீடு கூப்பிடு தூரத்தில் இருக்க, தெரு விளக்குகளைப் போட்டு விட்டார்கள்.

அது ஒரு வெள்ளிக்கிழமை. வீடுகளிலும் அடுத்தடுத்து விளக்குகளைப் போட்டு விடுவார்கள். பொதுவாகவே சாயங்காலம் விளக்கு வைத்து விட்டால் வெளியாளுக்குக் காசை எடுத்து நீட்ட அஞ்சுவார்கள். வெள்ளிக் கிழமையாகவும் போயிற்று. இந்த நாளில் 'லட்சுமி'யை வெளியேற்றி விட்டால், 'மூதேவி' வந்து குடியேறி விடுவாள் என்பது அவர்களது ஐதிகம்.

அவன் எட்டுக்களின் எண்ணிக்கையைக் கூட்டினான். கல் பாவிய தரை. வழுக்கல் இன்றிப் போனது.

நாராயணசாமியின் வீட்டைச் சமீபித்து விட்டான். அவன் வாசலில் நின்று குரலெடுக்கத் தயாரானான். அதற்குள்ளாகவே இருட்டில் நின்ற வீடு துல்லியமானது.

இப்போது நாராயணசாமியே இருந்தாலும் காசு பெயராது. கொடுத்தாலும் தடுக்க அந்த அம்மாள் இருப்பாள். 'நாளப் பின்ன வந்து வாங்கிக்கிறச் சொல்லுங்க' என்று வெடுக்கெனச் சொல்வாள். அவள் எங்காவது ஒரு வேலையாகச் சென்றிருந்தால் நன்றாயிருக்கும்.

சுமைக் கனமும் பசிக்கிறக்கமும் சேர்ந்து கொண்டது. 'சத்'தென்று கட்டைப் போட்டான். படுப்பதைப் போல் ஆயாசமாய் அமர்ந்து கொண்டான்.

பேச்சுக்களற்று வீழ்ந்த வேளையில் எதிரில் நிழல் தெரிந்தது. நாராயணசாமி தான் நின்று கொண்டிருந்தார்.

"யாரு... வேலாயியா?... என்னாத்தா இந்த நேரத்துல? புல்லுக்கட்டு கொண்டாந்தியாக்கும்?" கரிசனமான அவரது குரல் ஆழத் தொலைவிலிருந்து கேட்டது.

வார்த்தைகளில் அவளால் பேசி விட முடியவில்லை. மௌனமாய்ப் பதிலிறுத்தாள்.

"உள்ள ஒரு சத்தம் குடுத்திருக்க வேணாமா தாயி?... வந்து எம்புட்டு நேரமாச்சோ இந்த மழைத் தண்ணி காலத்துல..."

"கூலிக்காரி மழைத் தண்ணியப் பாத்தாப் பொழப்பு ஓடணுமே சாமீ... பிள்ளைக்கு ஊசிபோடணும்... வெள்ளிக் கெழமையும் அதுவுமா லைட்டுப் போட்ட நேரத்துல கட்டு கொண்டாந்திருக்கேம்.... ஐயாவுக என்ன சொல்வீகளோன்னுதா அசந்து ஒக்காந்துட்டே..." அவளது நா வறண்டிருந்தது. ஒரு சொம்புத் தண்ணீர் கிடைத்



''அந்த டாக்டர் மெகா சீரியல் எடுத்தவர்னு எப்படி அவ்வளவு உறுதியாச் சொல்றீங்க!''

''பாருங்க! மருந்துச் சீட்டையே பத்து பக்கத்துக்கு எழுதித் தர்றாரே!''

– ரெவீ

தாலும் ஒரு சொட்டு மிச்சம் வைக்காமல் குடித்து விட முடியும் போலிருந்தாள்.

"வெள்ளிக்கெழமயும் சனிக்கெழமயும் நாம பாத்து வைக்கிறதுதேந் தாயீ... அது வெளிச்சமாயிருந்தா என்ன... இருட்டா இருந்தா என்ன.... மனசுலதேங் கெட்ட எண்ணம் இருக்கக் கூடாது.... அவுகவுகளுக்கு ஆயிரம் செலவிருக்கு... ஆத்திர அவசரத்துக்குச் சகுனம் பாத்துக்கிட்டிருந்தம்னா சாவுதே மிஞ்சும்..." என்றபடி உள் நோக்கிக் குரல் கொடுத்தார் நாராயணசாமி.

அந்தக் குரலின் வலிமையில் அவரது சம்சாரம் அடங்கிப் போவாள் என்று வேலாயிக்குப் பட்டது. ●



# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை. ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து. உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

***முதியோர் சேவை பெரியது!***

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு **(80G, Income Tax Excemption)** உண்டு

**S.V. HOME FOR AGED**

#8, Janakiraman Colony, Near Arumbakkam Bus Stand,
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 475 5700; 475 1356. Pager : 9610 - 114668
Web Page : www.svhome.org
Email: svhome@svhome.org

---



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

☎ : (0435)
Off : 425948
Fax : 423777
Patasala : 422866

**Website : www-Kumbakonamonline.com/vedapadasala**

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு, பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்ககும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 457 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 171 மாணவர்களுக்கு 14 வேத, சாஸ்திர அத்யாபகர்கள், புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். ***புதிய பாடசாலை கட்டிட நிர்மாணப்பணி துவங்கப்பட்டு நடைபெற்று வருகிறது. நன்கொடை வரவேற்கப்படுகிறது.***

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>திட்ட விபரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை தொகை (One Time) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு பகுதி தொகை | Rs. 500 | Rs. 5000 |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs.15,000 |
| பௌர்ணமி ஆயுஷ்ய ஹோமம் | Rs. 1,000 | Rs.10,000 |
| ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakh |

**Cross** செய்யப்பட்ட **D.D.**-ஐ **A.V.M.S.G.D.P.S. Samithi** என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

# பொன்னியின் செல்வன்

## நாற்பத்து ஒன்றாம் அத்தியாயம்

## பாயுதே தீ



இத்தனை நேரம் அசைவற்று உட்கார்ந்திருந்த சம்புவரையர் இப்போது பாய்ந்து எழுந்து கந்தமாறனுடைய கையைப் பிடித்துக் கொண்டார்.

''அடே மூடா! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்?'' என்றார்.

''தந்தையே! இந்தச் சிநேகிதத் துரோகியைக் கொல்லுவதிலே என்ன தவறு?'' என்றான் கந்தமாறன்.

''என்ன தவறா? அதனால் நானும் நீயும் இந்தப் பழைமையான சம்புவரையர் குலமும் அழிந்து போவோம். இவனைக் கொன்றுவிட்டால் இளவரசரையும் இவனையும் சேர்த்துக் கொன்றுவிட்டதாக நம் பேரில் அல்லவா பழி சுமத்துவார்கள்? இதுகூடவா உனக்குத் தெரியவில்லை?'' என்றார் தந்தை.

''அவ்வாறு நம் பேரில் பழி சுமத்தக்கூடிய வல்லமையுடையவன் யார்? அவ்விதம் குற்றம் சுமத்திவிட்டு அவன் உயிருடன் பிழைத்திருப்பானா?'' என்று கேட்டான் கந்தமாறன்.

''ஐயோ! அசட்டுப்பிள்ளையே! உன்னுடைய வீரத்தையும் துணிச்சலையும் இதிலேதானா காட்ட வேண்டும்? உன்னுடைய யோசனையை ஆரம்பத்திலிருந்து கேட்டதினாலேதான் இந்த விபரீதம் நம் வீட்டில் நடந்துவிட்டது! பெரிய பழுவேட்டரையரையும் மற்றச் சிற்றரசர்களையும் நீதான் இந்த வீட்டுக்கு அழைத்தாய். மதுராந்தகத் தேவர் இரகசியமாக இங்கே வந்ததும் உன்னாலே

**அமரர் கல்கி**

தான். அது இந்த உன் அருமைச் சினே கிதன் மூலம் எல்லாருக்கும் தெரிந்து விட்டது. பிறகு ஆதித்த கரிகாலரைக் காஞ்சியிலிருந்து அழைத்து வந்தவனும் நீதான்! ஐயோ! அதன் விளைவு இப்படி யாகும் என்று நான் நினைக்கவே இல் லையே! மலையமான் - நமது குலத்தின் பழமையான விரோதி - பெரியதொரு படையுடன் நெருங்கி வந்துகொண்டிருக் கிறான். அவனுக்கு என்ன சொல்லப் போகிறேன்...? பழுவேட்டரையரும் இச் சமயம் பார்த்து ஊருக்குப் போய்விட் டார்...!'' என்று கூறிச் சம்புவரையர் திரும்பவும் தலையிலே அடித்துக்கொண் டார்.

கந்தமாறனின் கண்களில் நீர் ததும்ப "தந்தையே! தாங்கள் வீணாக வேதனைப் பட வேண்டாம். என்னால் நேர்ந்த விபரீ தத்துக்கு நானே தண்டனை அனுபவிக் கிறேன். தாங்கள் என்ன கட்டளை யிடுகிறீர்களோ, அவ்விதம் செய்யக் காத்திருக்கிறேன்!'' என்றான்.

"முதலில் இந்தப் பெண்ணை அழைத் துக்கொண்டு போய் அந்தப்புரத்தில் விட்டு விட்டுவா! இவள் ஏதாவது உளறி னால் வாயிலே துணியை அடைத்துக் கையையும் காலையும் கட்டிப் போட்டு விட்டு வா! இல்லாவிட்டால் இரகசிய அறையில் போட்டுப் பூட்டி விட்டு வா!'' என்றார் சம்புவரையர்.

மணிமேகலை தன் அருமைத் தந்தை அப்போது கொண்டிருந்த ரௌத்ராகாரத் தைப் பார்த்துவிட்டு நடு நடுங்கினாள். வந்தியத்தேவனுக்கு இப்போது உடனே ஆபத்து ஒன்றுமில்லை என்பதையும் தெரிந்துகொண்டாள்.

"தந்தையே! மன்னிக்க வேண்டும். தங் கள் கட்டளைப்படி நடந்துகொள்வேன். கந்தமாறன் என்னைத் தொட வேண் டாம். நானே இதோ தாய்மார்கள் இருக் கும் அந்தப்புரத்துக்குப் போய்விடு கிறேன்!'' என்று சொல்லிவிட்டு விடு விடு என்று அங்கிருந்து நடந்து சென்றாள். கந்தமாறனும் அவளைப் பின் தொடர்ந்து போனான்.

அவர்கள் சென்றவுடனே சம்புவரை யர் தம்முடன் வந்திருந்த ஆட்களைப் பார்த்து, ''இவனை அந்தக் கட்டில் காலுடன் சேர்த்து இறுக்கிக் கட்டுங்கள்!'' என்று உத்தரவிட்டார்.

அவ்விதமே ஆட்கள் வந்தியத் தேவனை நெருங்கி வந்தபோது அவன் அமைதியாக இருந்தான். கட்டில் காலுடன் சேர்த்துக் கட்டிய போதும் அவன் எவ்விதத் தடங்கலும் செய்யவில்லை. கட்டி முடிந்தவுடனே அவன், "ஐயா! சற்றே யோசித்துப் பாருங் கள்! கரிகாலருடைய அந்தரங்கத்துக்குரிய நண்பன் நான். அவரைக் கொல்லுவதி னால் எனக்கு என்ன லாபம்? உண்மை யில் அவரைக் கொன்ற பாதகர்கள் சுரங் கப்பாதை வழியாகத் தப்பித்துக்கொண்டு போய் விட்டார்கள். அவர்களைத் தொடர்ந்து போய் பிடிப்பதற்கு முயற்சி செய்யுங்கள். அவர்களை நான் பார்த் திருக்கிறேன். என்னை அவிழ்த்துவிட் டால், நானே தங்களுடன் வந்து அவர் களைப் பிடிப்பதற்கு உதவி செய்வேன்! கடவுள் அறியச் சத்தியமாகச் சொல் கிறேன். தங்களிடமிருந்து தப்பிச் செல்வதற்கு நான் பிரயத்தனம் செய்ய மாட்டேன்!'' என்றான்.

"அடே! நீ சொல்லுவது உண்மையா னால், கரிகாலர் கொலை செய்யப்படும் போது நீ என்ன செய்துகொண்டிருந் தாய்? வேடிக்கை பார்த்துக்கொண்டிருந் தாயா?'' என்றார் சம்புவரையர்.

"ஐயா! பழுவூர் ராணியும் கரிகாலரும் பேசிக்கொண்டிருந்தபோது திடீரென்று கொலைகாரர்கள் பிரவேசித்தார்கள். அவர்களைத் தடுக்க நான் யத்தனித்த போது பயங்கரமான தோற்றமுடைய காளாமுகன் ஒருவன் என் கழுத்தைப் பிடித்து நெறித்தான். நான் நினைவிழந்து விட்டேன். மறுபடியும் நினைவு வந்த போது ஆதித்த கரிகாலர் உயிரற்று விழுந்து கிடப்பதைக் கண்டேன்!'' என்றான் வந்தியத்தேவன்.

இச் சமயத்தில் அந்த மாளிகைச் சுவருக்கு அப்பால் பெரியதொரு கூச்சல் கேட்டது. ஆயிரக்கணக்கானவர்களின் கோபக் குரலிலிருந்து எழுந்த கோஷத் தைப் போல் தொனித்தது.

சம்புவரையர் அதைக் காது கொடுத் துக் கேட்டார். வந்தியத்தேவனைப்



பார்த்து, சரி! சரி! நீ சொல்வது உண்மையாகவே இருந்தாலும் சற்று நேரம் நீ இங்கேயே இரு! உன்னுடைய அருமை நண்பராகிய இளவரசருக்குத் துணையாக இரு! அது என்ன கூச்சல் என்று பார்த்துவிட்டுப் பிறகு வருகிறேன்! வந்து உன் கட்சியை முழுதும் தெரிந்துகொள்கிறேன்!'' என்று கூறிவிட்டுச் சம்புவரையர் புறப்பட்டார். அவருடன் ஆட்களும் கிளம்பினார்கள். போகும்போது சம்புவரையரின் கட்டளைப்படி அந்த அறையின் கதவைச் சாத்தி வெளிப்புறத்தில்

தாளிட்டு விட்டுச் சென்றார்கள்.

மறுபடியும் அந்த அறையில் இருள் சூழ்ந்தது. வந்தியத்தேவனுடைய உள்ளத்திலோ சொல்ல முடியாத வேதனை குடிகொண்டது! சில மாதங்களுக்கு முன்னர் அந்தக் கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குத் தான் வந்தது விருந்து நடந்தவற்றையெல்லாம் நினைத்துப் பார்த்துக்கொண்டான். வானத்திலே அப்போது தான் பார்த்த தூமகேதுவையும் அதைப் பற்றி மக்கள் பேசிக் கொண்டதையும் ஞாபகப் படுத்திக் கொண்டான். வானத்தில் வால் நட்சத்திரம் காணப்பட்டமையால் சுந்தர சோழருடைய இறுதி நாள் நெருங்கி விட்டதாக எல்லாரும் நினைத்தார்கள். சுந்தர சோழர் நீண்ட நாட்களாக நோய்ப் பட்டுக் கிடந்தபடியால் அவ்வாறு மக்கள் எதிர்பார்த்தது இயற்கைதான். அதனாலேயே அவருக்கு அடுத்தாற்போல் பட்டத்துக்கு வரக்கூடியவர் யார் என்பது பற்றியும் ஜனங்கள் பேசினார்கள். இந்த மாளிகையிலேயே சிற்றரசர்கள் கூடி அதைப் பற்றிப் பேசினார்கள். ஆனால் எல்லாரும் எதிர்பார்த்தது ஒன்றும் நடந்தது ஒன்றுமாக முடிந்தது. வாலிப வயதினரும் வீராதி வீரருமான ஆதித்த கரிகாலர் மாண்டு போனார். உயிரற்ற அவரது உடல் இதோ இந்த அறையில் கிடக்கிறது. நோய்ப்பட்டுள்ள சுந்தர சோழர் இன்னும் உயிரோடு இருக்கிறார். ஆனால் இன்னும் நெடுங்காலம் இருப்பாரா? தமது அருமைக் குமாரரின் அகால மரணச் செய்தியை அறிந்த பிறகும் உயிரோடு இருப்பாரா? ஐயோ! மகனைப் பார்க்க வேண்டுமென்று தந்தை எவ்வளவு ஆவல் கொண்டிருந்தார்? தந்தை வந்து தங்கியிருப்பதற்காகக் கரிகாலர் காஞ்சியில் பொன் மாளிகை கட்டினாரே? அந்தப் பொன் மாளிகையில் தந்தையை வரவேற்று உபசரிப்பதற்குக் கொடுத்து வைக்காமல் குமாரர் போய்விட்டாரே? இதிலிருந்து இன்னும் என்னென்ன விளையப் போகிறதோ, தெரியவில்லை. சோழ சாம்ராஜ்யம் முழுவதும் ஒரே துயர வெள்ளத்தில் மூழ்கப் போகிறது. அது மட்டுந்தானா? எத்தனை விதமான உட்கலகங்கள் விளையப் போகின்றனவோ, யாருக்குத் தெரியும்? சிற்றரசர்களுக்குள் பெருஞ் சண்டை மூளப் போகிறது நிச்சயம். சற்று முன்னால் வெளியிலே கேட்ட சத்தம் மலையமானுடைய படை வீரர்கள் போட்ட சத்தமாகத்தான் இருக்க வேண்டும்! அவர்கள் எதற்காக அப்படிக் கோஷமிட்டார்கள்? இந்தக் கடம்பூர் மாளிகையைத் தாக்கப் போகிறார்களா, என்ன? எதற்காக? கரிகாலருடைய மரணம் பற்றிய செய்தி ஒருவேளை அவர்களுக்கு எட்டியிருக்குமோ? ஆகா! சம்புவரையர் இதை எப்படிச் சமாளிக்கப் போகிறார்? நம் பேரில் கரிகாலரைக் கொன்ற குற்றத்தைச் சுமத்திச் சமாளிக்கப் பார்ப்பார். ஆனால் அதை மலையமான் நம்புவாரா? நம்பினாலுங்கூட, சம்புவரையரின் மாளிகையில் இது நடந்திருப்பதால் அவரைச் சும்மா விட்டு விடுவாரா? முன்னர் இங்கே நடந்த சதியாலோசனையைப் பற்றி மலையமானுக்குத் தெரிந்திருக்க வேண்டும். தெரிந்திராவிட்டாலும் ஆழ்வார்க்கடியான் போய் எச்சரித்து விட்டுப் போயிருக்கிறான். ஆகையினாலே தான் படை திரட்டிக்கொண்டு வருகிறார். மலையமான் தம் பேரப் பிள்ளை மீது எவ்வளவு அன்பு வைத்திருந்தார் என்பது வந்தியத்தேவனுக்கு நன்றாய்த் தெரியும். இந்தச் செய்தியை அறியும்போது அவர் என்ன செய்வார் என்பது யாருக்குத் தெரியும்? சம்புவரையர் குடும்பத்தையே நாசம் செய்து இந்த மாளிகையையும் அடியோடு அழித்துப் போட்டாலும் போட்டு விடுவார்.

பாவம்! கந்தமாறன்! நல்லபிள்ளை! நம்மிடம் எவ்வளவு சினேகமாக இருந்தான்? அவ்வளவு சினேகமும் கொடிய துவேஷமாக அல்லவா மாறிவிட்டது? எல்லாம் அந்தப் பழுவூர் மோகினியின் காரணமாகத்தான்... பார்க்கப் போனால், அவளுடைய கதையும் சோக மயமாக இருக்கிறது. அவள் பேரிலே தான் எப்படிக் குற்றம் சொல்லுவது? எல்லாம் விதி செய்யும் கொடுமைதான்...!

விதி!விதி! மணிமேகலையின் விதியை என்னவென்று சொல்லுவது? என்னிடம் எதற்காக அவள் இவ்வளவு அன்பு

காட்ட வேண்டும்? என்னைத் தப்புவிப்பதற்காக முன் வந்து 'நான் கொன்றேன்' என்று ஒப்புக்கொண்டாளே? இத்தகைய அன்புக்கு இணை ஏது? – இதற்குக் கைம்மாறுதான் என்ன செய்யப் போகிறேன்...?

வந்தியத்தேவன் தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். கைம்மாறு செய்வதைப் பற்றி எண்ணுவது என்ன பைத்தியக்காரத்தனம்! மற்றவர்களைப் பற்றி நான் பரிதாபப்படுவதிலேதான் என்ன அர்த்தம் இருக்கிறது? என்னுடைய நிலைமையைக் காட்டிலும் பயங்கரமான பரிதாபமான நிலைமையில் உள்ளவர்கள் வேறு யாரும் இல்லை! ஆதித்த கரிகாலரைக் கொன்றதாக என் பேரில் குற்றம் சுமத்தப் போகிறார்கள்! நான் அந்தப் பாதகத்தைச் செய்யவில்லை என்று நிருபிப்பதற்கு எவ்விதச் சாட்சியமும் இல்லை. நந்தினியும் ரவிதாஸன் கூட்டத்தாரும் போயே போய் விட்டார்கள்.



அவர்களைத் தொடர்ந்து போய்ப் பிடிப்பதற்கு யாரும் முயலவில்லை. அவர்களை ஒருவேளை பிடித்தாலுங்கூட நானும் அவர்களுடன் சேர்ந்து சதி செய்யவில்லை என்று எப்படி நிருபிக்க முடியும்? முடியாது!

பட்டத்து இளவரசரைக் கொலை செய்த துரோகிக்கு என்ன விதமான தண்டனை கொடுப்பார்கள்? வெறுமனே கொலைக்குக் கொலை என்று தண்டனை கொடுத்து விட மாட்டார்கள். இம் மாதிரி காரியத்தை இனி யாரும் கனவிலும் செய்ய நினையாதவண்ணம் பயங்கரமான சித்திரவதைத் தண்டனை ஏற்படுத்துவார்கள். என்னவிதமான தண்டனை கொடுத்தாலும் கொடுக்கட்டும். கரிகாலரை நான் கொன்றுவிட்டதாகப் பழையாறை இளையபிராட்டியும் பொன்னியின் செல்வரும் கருதுவார்கள் அல்லவா? அதைக் காட்டிலும் வேறு என்ன சித்திரவதைக் கொடுமையாக இருக்க முடியும்? தெய்வமே! சென்ற மூன்று நான்கு மாத காலத்தில் நான் எவ்வளவோ இக்கட்டுகளில் தப்பி வந்ததெல்லாம் இந்தப் பயங்கரமான அபகீர்த்திக்கு ஆளாவதற்குத்தானா...?



இவ்வாறெல்லாம் வந்தியத்தேவனுடைய உள்ளத்தில் அலை மேல் அலை எறிவது போல் எத்தனையோ எண்ணங்கள் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. எவ்வளவு நேரம் இப்படிக் கழிந்தது என்று அவனுக்குத் தெரியாது. இருளடர்ந்திருந்த அந்த அறையில் திடீரென்று மெல்லிய புகைப்படலம் பரவியபோது அவனுடைய எண்ணத் தொடர்பு கலைந்தது. அது என்ன புகை, எங்கிருந்து வருகிறது என்று யோசிக்கத் தொடங்கினான். சற்று நேரத்துக்கெல்லாம் மிகச் சொற்ப வெளிச்சமும் பரவியது. அந்த வெளிச்சத்தில் ஆதித்த கரிகாலரின் உடல் தெரிந்தது. கதவுகள் சாத்தியபடியே இருந்தன. ஆகையால் விளக்கு வெளிச்சமாக இருக்க முடியாது. பின், என்ன வெளிச்சம்? நாலா பக்கமும் கூர்ந்து கவனிக்கலானான். புகையும் வெளிச்சமும் பக்கத்து வேட்டை மண்டபத்திலிருந்து வருகின்றன என்பதை அறிந்தான். வேட்டை மண்டபத்திலிருந்து புகை வருவதற்குக் காரணம் என்ன...? ஒருவேளை தீப் பிடித்திருக்குமோ? வேட்டை மண்டபத்தின் வழியாக, சுரங்கப்பாதையில் சென்றவர்கள், வேண்டுமென்றே தீ வைத்து விட்டுப் போயிருப்பார்களோ? அல்லது அவனும் மணிமேகலையும் வேட்டை மண்டபத்துக்குள் வந்தபோது கொண்டு வந்த விளக்கு இந்த விபத்துக்குக் காரணமாயிருக்குமோ...?

வர வரப் புகை அதிகமாயிற்று. உஷ்ணமும் அதிகரித்து வந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் வேட்டை மண்டபத்துக்கும் அந்த அறைக்கும் இடையிலிருந்த மரப் பலகைச் சுவர்களின் இடுக்குகளின் வழியாகத் தீயின் ஜுவாலைகள் தெரியத் தொடங்கின. இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் அக்கினி பகவான் தமது ஜோதி மயமான கரங்களை நீட்டித் துழாவிக் கொண்டு, அந்த அறைக்குள்ளேயே பிரவேசித்து விட்டார்!

அக்கினி பகவானுடைய பிரவேசத்தைக் கொஞ்ச நேரம் வந்தியத்தேவன் கண்கொட்டா ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். முதலில் அவனுக்கு ஒரு குதூகலமே ஏற்பட்டது. "நம்முடைய கவலைகளையெல்லாம் அக்கினி பகவான் தீர்த்து வைத்து விடப் போகிறார். ஆதித்த கரிகாலருக்கும் நமக்கும் ஒரே இடத்தில் தகனக் கிரியை நடந்து விடப் போகிறது!" என்று எண்ணினான். ஆனால் இது சிறிது நேரந்தான் நிலைத்திருந்தது. கரிகாலரைக் கொன்றவன் என்ற குற்றச்சாட்டுதலுடன் இந்த உலகைவிட்டுப் போவதற்கு அவன் இஷ்டப்படவில்லை. சம்புவரையரும் அவருடைய மகனும் அப்படித்தான் வெளியிலே சொல்லுவார்கள். சிலர் அதை நம்பவும் செய்வார்கள். யார் நம்பினாலும் நம்பா விட்டாலும் பொன்னியின் செல்வரும் குந்தவை தேவியும் அவ்வாறு நம்பக்கூடாது. நான் அந்தப் பயங்கரக் குற்றத்தைச் செய்யவில்லை என்று அவர்களுக்காகவேனும் நிருபித்தாக வேண்டும். அது மட்டும் அல்ல; வீராதி வீரரான கரிகாலருடைய திருமேனிக்கு இறுதிச் சடங்கு இப்படி நடக்கும்படி விடலாமா? அவருடைய பெற்றோர்களும் உற்றார் உறவினர்களும் அவருடைய உயிரற்ற உடம்பையாவது பார்க்க வேண்டாமா...? ஆம், ஆம்! அவருடைய உயிரைக் காப்பாற்ற முடியாவிட்டாலும்

அவருடைய உடம்பையாவது காப்பாற்ற வேண்டும். சக்கரவர்த்தித் திருமகனுக்குரிய மரியாதைகளுடனே இறுதிச்சடங்குகளைச் செய்வதற்கு வழி தேட வேண்டும்...!

இதுவரையில் வந்தியத்தேவன் தன்னை விடுவித்துக் கொள்ளப் பிரயத்தனம் செய்யவில்லை. அவனை எப்படிக் கட்டியிருக்கிறார்கள் என்றுகூடக் கவனிக்கவில்லை. இப்போது கவனித்தான். முதலில் அவனுடைய முன்கைகள் இரண்டையும் சேர்த்துக் கட்டி அந்தக் கயிற்றைக் கொண்டே அவன் உடம்பு முழுவதையும் கட்டிலின் காலோடு சேர்த்துக் கட்டியிருந்தார்கள். குனியவோ நிமிரவோ முடியவில்லை. அவனுடைய பலம்



முழுவதும் செலுத்திக் கைக் கட்டுக்களை இழுத்தும் பல்லினால் கடித்தும் அவிழ்த்துக் கொள்ளப் பார்த்தான்; முடியவில்லை. அவ்வாறே உடம்பின் கட்டுக்களைத் திமிறி அவிழ்க்கப் பார்த்தான்; அதுவும் முடியவில்லை. ஆனால் அப்படி உடம்பைத் திமிறியபோது கட்டில் அசைந்தது. உடனே ஒரு யோசனை தோன்றியது. கட்டிலை இழுத்துக்கொண்டு வேட்டை மண்டபத்தின் இரகசிய வாசலை நோக்கிச் சென்றான். அது அவ்வளவு எளிதாக இல்லை. அங்குலம் அங்குலமாக நகர வேண்டியிருந்தது. கட்டிலை இழுத்த போதெல்லாம் அவன் உடம்பின் கட்டுக்கள் இறுகி வேதனை உண்டாக்கின. ஆயினும் சகித்துக்கொண்டு சென்றான். வாசலை நெருங்கியபோது, சாத்தியிருந்த கதவு இடுக்குகளின் வழியாகத் தீயின் ஜுவாலைகள் வந்துகொண்டிருந்தன. அந்த ஜுவாலைகளில் கையைக் கட்டியிருந்த கயிற்றுக் கத்தையைப் பிடித்தான். கயிற்றில் தீப்பிடித்தது. அதே சமயத்தில் அவனுடைய கைகள் மீதும் நெருப்பு ஜுவாலைகள் வீசிச் சகிக்க முடியாத வேதனையை உண்டாக்கின. ஆயினும் பொறுத்துக்கொண்டிருந்து, நெருப்புப் பிடித்துக் கைக்கட்டு அறுபட்டவுடனே உடம்பின் கட்டுக்களை அவசர அவசரமாக அவிழ்த்துக்கொண்டான். அவிழ்த்து முடிவதற்குள்ளே கட்டிலின் திரைச்சீலைகளிலே தீப்பிடித்துக்கொண்டது. அறையில் புகை சூழ்ந்தது. வந்தியத்தேவனுடைய உடம்பெல்லாம் பற்றி எரிவது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அவனுடைய கண்களில் முதலில் எரிச்சல் கண்டது. பின்னர் கண்ணீர் ததும்பிற்று. கண் பார்வையே மங்கத் தொடங்கியது.

ஏது? ஏது? நானும் இளவரசரோடு இங்கேயே மாண்டு எரிந்து போக வேண்டியதுதான்! ஒரு விதத்தில் இதுவும் நல்லதுதானே! இளவரசரைக் காப்பாற்றத்தான் முடியவில்லை; அவரோடு சாகும் பேறாவது எனக்குக் கிடைக்கட்டும்...! ச்சீ! இது என்ன யோசனை? நான் இறப்பது பற்றிக் கவலையில்லை. இளவரசருடைய உடல் இங்கு எரிந்து சாம்பலானால், எனக்கு அழியாத பழி அல்லவா ஏற்படும்? என்னை அறிந்தவர்கள் என்னுடைய நினைவு வரும்போதெல்லாம் என்னைச் சபிப்பார்களே? அத்தகைய பழிக்கு இடங்கொடுத்து நான் ஏன் சாக வேண்டும்? இளவரசரின் உடலை எப்படியேனும் வெளியே எடுத்துச்செல்வேன். அவருடைய பாட்டன் மலையமானிடம் ஒப்புவிப்பேன். இளவரசரை நான் கொல்லவில்லையென்றும், கொன்றவர்களைக் கண்டுபிடித்துக் கொடுப்பேனென்றும் உறுதி கூறுவேன். அவ்வாறு ஒப்புக்கொண்ட காரியத்தைச் செய்து முடித்த பிறகு நான் இறந்தால் பாதகம் இல்லை. அதுவரையில் எப்படியாவது இந்த உயிரை வைத்துக் கொண்டிருக்க வேண்டும்...

வந்தியத்தேவன் இப்போது கட்டுக்கள் அனைத்தையும் அவிழ்த்துக்கொண்டு விடுதலை பெற்றான். ஆனால் இது என்ன? கட்டில் தீப்பிடித்து எரிகிறதே! வெப்பம் தாங்க முடியவில்லையே? கண்களைத் திறக்கவே முடியவில்லையே? திறந்தாலும் புகை மண்டிக் கிடப்பதால் ஒன்றுமே தெரியவில்லையே...? ஆயினும் இளவரசரின் உடலைக் கண்டுபிடித்துத்தான் ஆக வேண்டும். வந்தியத்தேவன் தரையில் உட்கார்ந்த வண்ணம் பரபரப்புடன் கையை நீட்டித் துழாவிக்கொண்டு அங்குமிங்கும் அவசரமாக நகர்ந்து தேடினான். தேடிய நேரம் சில நிமிஷந்தான் இருக்கும்; ஆனால் பல யுகங்களைப் போல் அவனுக்குத் தோன்றியது. கடைசியாக இளவரசரின் உடம்பு அவனுடைய கைகளுக்குத் தட்டுப்பட்டது. அந்த உடம்பைத் தூக்கி எடுத்துத் தோளின் மேல் போட்டுக்கொண்டான். அப்போது தான் வெளியே போவது எப்படி என்ற யோசனை உண்டாயிற்று. வேட்டை மண்டபத்துக்குள் போவது இயலாத காரியம்! ஆகா! அங்கே எத்தனையோ காலமாகச் சம்புவரையர்கள் சேகரித்து வைத்திருந்த மிருகங்களெல்லாம் இதற்குள் எரிந்து சாம்பலாகப் போயிருக்கும்...! அந்த அறையிலிருந்து சாதாரணமாக எல்லாரும் வெளியே போவதற்குரிய பிரதான வாசலை அடைந்தான். ஒரு கையினால் கதவை இடித்துப் பார்த்தான்; காலினால் உதைத்துப் பார்த்தான்; உடம்பினால் கதவின் பேரில் மோதிக் கொண்டும்

பார்த்தான். "தீ! தீ! கதவைத் திறவுங்கள்!" என்று சத்தம் போட்டுப் பார்த்தான். ஒன்றும் பயன்படவில்லை. சீச்சீ! என்ன அறிவீனம்! யாழ்க்களஞ்சியத்தின் வழியாகத்தான் ஏறிப் போக வேண்டும்! ஐயோ! அதற்குள் அதிலேயும் தீப்பிடிக்காமல் இருக்க வேண்டுமே? இத்தனை நேரம் வீண் பொழுது போக்கி விட்டோமே?

இப்போது அந்த அறை நல்ல பிரகாசமாக இருந்தது. ஆனால் அந்தப் பிரகாசம் பயன்படாதபடி புகை மண்டிக் கிடந்தது. கண்ணைத் திறந்து பார்க்கவே முடியவில்லை. கஷ்டத்துடன் பார்த்தாலும் திக்குத் திசை தெரியவில்லை. யாழ்க் களஞ்சியம் இருக்குமிடத்தை உத்தேசமாகக் குறி வைத்துக் கொண்டு வந்தியத்தேவன் ஓடினான். வழியில் காலில் ஏதோ தட்டுப்பட்டது. அது 'டணார்' என்ற ஒலியை உண்டாக்கியது. ஆகா! அது தனக்கு நினைவு வந்தபோது பக்கத்தில் கிடந்து கைக்கு அகப்பட்ட திருகுமடல் உள்ள கத்தியாகவே இருக்க வேண்டும். அந்தக் கத்தியில் ஏதோ ஒரு மர்மம் இருக்கிறது. அதை எடுத்துக் கொள்ளலாம். வழியில் யாராவது குறுக்கிட்டுத் தடுத்தால் ஒருவேளை அந்தக் கத்தி உபயோகப்பட்டாலும் படும்...



வ்விதம் எண்ணி அந்தக் கத்தியைக் குனிந்து எடுத்தான். அப்போது எரிந்த கட்டிலிலிருந்து தெறித்து வந்த ஜுவாலைத் தணல் ஒன்று அவன் தோள் மீது விழுந்தது. அதைத் தட்டி அப்பால் எறிந்து விட்டு, ஓடிப் போய் யாழ்க் களஞ்சியத்தை அடைந்தான். இவ்வளவு நேரம் அவன் தோள்மீது சாத்தியிருந்த கரிகாலருடைய தேகத்தை அவனுடைய ஒரு கை இறுக்கிப் பிடித்துக்கொண்டிருந்தது. ஆனால் அவ்விதம் தோள் மீது சாத்திக்கொண்டே களஞ்சியத்தின் படிகளில் ஏறுவது அசாத்தியம். மேலே கதவு வேறே சாத்தியிருந்தது. எனவே கரிகாலருடைய தேகத்தைக் கீழே நிறுத்தி வைத்துவிட்டு ஏறி மேலேயுள்ள கதவைத் திறந்தான். பாதிக் களஞ்சியத்தில் நின்றுகொண்டு குனிந்து எடுத்தான். தெய்வமே! அதற்குள் தீ அக் களஞ்சியத்துக்கும் வந்துவிட்டதே! இன்னும் சில நிமிஷம் தாமதித்திருந்தால், இந்த வழியும் இல்லாமல் போயிருக்கும்...!

வந்தியத்தேவன் மேல் மச்சில் கரிகாலருடைய உடலைத் தூக்கிப் போட்டுவிட்டுத் தானும் ஏறி வந்து சேர்ந்தபோது பாதிப் பிராணன் போனவனாக இருந்தான். இத்தனை நேரம் நெருப்பிலும் புகையிலும் வெந்து கொண்டிருந்தவன் மீது இப்போது குளிர்ந்த காற்று வீசிற்று. சிறிது நேரம் அங்கேயே கிடந்து இளைப்பாறலாமா என்று யோசித்தான். கூடாது, கூடாது! ஒரு நிமிஷங் கூடத் தாமதிக்கக் கூடாது! தீப்பிடித்த அக் கட்டடம் எப்போது இடிந்து விழும் என்று யார் கண்டது? மறுபடியும் கரிகாலருடைய உடலை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு மேல் மச்சு வழியாகவே விரைந்து சென்றான். முன்னொரு தடவை போனது போலவே மாடகூடங்களைக் கடந்து சென்றான். ஆனால் முன்னே அவன் தனியாகப் போனபடியால் மாளிகை மச்சிலிருந்து கீழே இறங்கி நிலா முற்றத்தைக் கடந்து மதில் சுவர்மீது ஏறிக் குதித்துப் போவது சாத்தியமாயிருந்தது. இப்போது அது முடியுமா? அவன் மிகவும் களைத்துப் போயிருந்ததுமின்றி ஆதித்த கரிகாலருடைய தேகத்தையும் அல்லவா தூக்கிப் போக வேண்டியிருக்கிறது?

அப்போது அம் மாளிகைக்கு வெளியே நாலா பக்கங்களில் இருந்தும் எழுந்த பெரும் ஆரவாரக் கூச்சல் மீது அவன் கவனம் சென்றது. ஆகா! இது என்ன? மலையமானுடைய வீரர்கள் கோட்டையைத் தாக்கத் தொடங்கி விட்டார்கள் போலிருக்கிறதே! முன்வாசல் கதவைத் தாக்கித் தகர்க்கிறார்கள் போலிருக்கிறதே! மதில் சுவர் மீது வீரர் பலர் ஏறிக் குதிக்கிறார்களே! இளவரசர் கொலையுண்டார் என்ற செய்தியை அறிந்துதான் மலையமான் கடம்பூர் மாளிகையைத் தாக்கக் கட்டளையிட்டு விட்டாரா? அப்படியானால், கரிகாலருடைய உடலைத் தூக்கிக் கொண்டு வரும் என்னைப் பார்த்தால் அவ் வீரர்கள் என்ன செய்வார்கள்? ஏன்? நான்தான் அவரைக் கொன்றதாக எண்ணிக்கொள்வார்கள்! என்னைச் சின்னாபின்னம் செய்து போடுவார்கள்

ஆகையால் நான் மிக ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். யார் கண்ணிலும் தென்படாமல் போக வேண்டும். மலையமான் இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து அவரிடம் அவருடைய பேரப் பிள்ளையின் திருமேனியை ஒப்படைத்து விட வேண்டும். அதற்குப் பிறகு நடப்பது நடந்துவிட்டுப் போகட்டும்...!

பின்னர், வந்தியத்தேவன் மிக ஜாக்கிரதையாக மாடகூடங்களின் மறைவிலும் அவற்றின் நிழல் படர்ந்திருந்த இருளான இடங்களிலுமே பதுங்கிப் பதுங்கி நடந்து சென்றான்.

கடைசியாக, முதல் தடவை அங்கே வந்திருந்தபோது எவ்விடத்தில் நின்று கீழே நடந்த சிற்றரசர்களின் சதியாலோசனையைக் கவனித்தனோ, அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தான்.

கீழே எப்படி இறங்குவது என்பதாக யோசித்துக்கொண்டு அவன் அங்குமிங்கும் பார்த்தபோது, சுவர் ஓரத்தில் ஏணி ஒன்று வைக்கப்பட்டிருந்தது புலப்பட்டது. அது மட்டும் அல்ல; ஏணியின் பக்கத்தில் மனித உருவம் ஒன்றும் தெரிந்தது. அது யாராயிருக்கும்? ஏணியை வைத்துக் கொண்டு யாருக்காகக் காத்திருக்கிறான்? தான் அந்த ஏணி வழியாகக் கீழே இறங்கினால் என்ன நேரும்? என்ன நேர்ந்தாலும் சரிதான்! அந்த ஏணியை உபயோகப்படுத்திக் கொண்டே தீர வேண்டும்! நல்லவேளையாகக் கையிலே கத்தி ஒன்று இருக்கிறது! எது நேர்ந்தாலும் பார்த்துக் கொள்ளலாம்.

இந்தச் சமயத்தில் முன் வாசலுக்கு அருகில் ஆரவாரம் அதிகமாயிற்று. அது என்னவென்று தெரிந்து கொள்வதற்காகவோ, என்னவோ, ஏணிக்கு அருகில் நின்ற மனிதன் சற்று அப்பால் போனான்.

ரொம்ப நல்லதாய்ப் போயிற்று என்று எண்ணி வந்தியத்தேவன் ஏணி வழியாக விரைந்து கீழே இறங்கினான். அவன் கீழே இறங்கித் தரையில் காலை வைத்ததற்கும் போன மனிதன் திரும்பி வருவதற்கும் சரியாயிருந்தது.

"சாமி! இவ்வளவு நேரம் பண்ணி விட்டீர்களே!" என்று அம்மனிதன் கேட்டதும், அவன் இடும்பன்காரி என்பதை வந்தியத்தேவன் தெரிந்து கொண்டான். அதே கணத்தில் இடும்பன்காரி யாரை எதிர்பார்த்து அங்கே காத்துக்கொண்டிருந்தான் என்பதையும் ஒருவாறு ஊகித்துக்கொண்டான்.

இடும்பன்காரி அவன் அருகில் வந்ததும் வியப்புடன், "அடே! நீயா? யாரைத் தோளில் போட்டுக்கொண்டு வருகிறாய்?" என்று கேட்டான்.

"ஆம், அப்பா! நான்தான்! காளாமுகச் சாமியாரின் சீடன்! ரணபத்திரகாளியின் பலியுடனே என்னை முன்னால் அனுப்பினார். அவர் பின்னால் வருகிறார். உன்னை இங்கேயே ஏணியுடன் இருக்கச் சொன்னார்! இதோ பார்! இந்தக் கத்தியை உனக்கு அடையாளங் காட்டச் சொன்னார்!" என்று வந்தியத்தேவன் கூறி, திருகு கத்தியைக் காட்டினான்.

இடும்பன்காரி சிறிது சந்தேகத்துடனேயே, "இத்தனை நாளாக நீ எனக்குச் சொல்லவில்லையே? போனால் போகட்டும். சாமியார் இவ்வளவு நேரம் பண்ணுகிறாரே! எப்படி இங்கிருந்து வெளியே போகப் போகிறோம்? திருக்கோவலூர் வீரர்கள் மாளிகையைச் சூழ்ந்துகொண்டு உள்ளே வரவும் தொடங்கி விட்டார்களே!" என்றான்.

"அதனால் என்ன? கூட்டம் அதிகமானால் நாம் தப்பிச் செல்வது சுலபம். அதெல்லாம் பெரிய சாமியாருக்குச் சொல்லித் தர வேண்டுமா? அவர் எப்படியோ வழி கண்டுபிடிப்பார். நீ இங்கேயே அவர் வரும் வரையில் காத்திரு! நான் போய் நந்தவனத்தில் இருப்பதாகச் சொல்லு!" என்றான் வந்தியத்தேவன்.

இடும்பன்காரியின் மறு மொழிக்குக் காத்திராமல் விடு விடுவென்று மேலே நடந்தான். இடும்பன்காரியின் கண்ணோட்டத்திலிருந்து மறைந்ததும், அந்த மாளிகையின் முன் வாசல் கோபுரத்தை நோக்கி நடந்தான்.

(தொடரும்)




# "கத்தி முனையில்"

பாபாவின் சொற்பொழிவுகள் பெரும்பாலும் தெலுங்கில்தான் இருக்கும். அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பணியை கடந்த பத்தாண்டு காலமாகச் செய்து வருகிறார் அனில்குமார் காமராஜு. ஐம்பத்தெட்டு வயதாகும் இவர், குண்டூரில் உள்ள ஆந்திரா கிறிஸ்தவக் கல்லூரியில் படித்து, பின்னர் அங்கேயே இருபத்தைந்து ஆண்டுகள் பணியாற்றியவர். இப்போது புட்டபர்த்தியில் உள்ள சத்ய சாயி பல்கலைக்கழகத்தில் பயோ சயின்ஸ் துறையில் புரொபசராகப் பணியாற்றுகிறார். இதற்கு முன், பெங்களூரில் உள்ள சத்ய சாயி கல்லூரியில் முதல்வராக இருந்தவர். புட்டபர்த்தியில், பல்கலைக்கழக பேராசிரியர்கள், மற்றும் ஆசிரியர்களுக்கான குடியிருப்பில், அனில்குமார் காமராஜுவைச் சந்தித்துப் பேசினோம்:

"ஒருமுறை ஆங்கிலப் புலமை மிகுந்த கல்வியாளர் ஒருவர், பாபாவைச் சந்தித்த போது, பாபா, what is love? என்று அவரிடம் கேட்டார். அவரால் சட்டென்று பதில் சொல்ல முடியவில்லை. அவரது தயக்கத்தைப் புரிந்து கொண்டு, பாபாவே 'love is selflessness' என்று விளக்கம் கொடுத்தார். அடுத்து, அவரிடம், 'what is self?' என்று ஒரு கேள்வியைக் கேட்டார். அவருக்குப் பதில் தெரியவில்லை. பாபாவே விளக்கம் சொன்னார்: 'self is lovelessness'. இதை எதற்காகக் குறிப்பிடுகிறேன் என்றால், பாபா முறைப்படி பெரிய படிப்பு எதுவும் படிக்காதவர்; ஆனால் அவருடைய ஆங்கில மொழிப்புலமை அபாரமானது என்பதை எடுத்துக் காட்டுவதற்குத்தான்.

"பாபாவின் சொற்பொழிவுகளை மொழி பெயர்ப்பதில் என்பணி ஒலிப்பெருக்கி போன்றது. பாபா முதலில் தாமே தெலுங்கில் பேசிவிட்டு, அதன்பின், என் வாய் மூலமாக ஆங்கிலம் பேசுகிறார் என்றே நான் கருதுகிறேன். நான் அதற்கே பெரும் பாக்கியம் செய்திருக்க வேண்டும் என நினைக்கிறேன். அதே சமயம், இப்பணியை ஒரு பெரும் சவாலாகவும் நான் கருதுகிறேன்.

"குரலில் ஏற்ற இறக்கங்கள் கொடுத்து, அழுத்தம், திருத்தமாக அற்புதமாய்ப் பேசுவார் பாபா. எனவே, பாபா சொல்வதைச் சட்டென்று கிரகித்துக் கொண்டு அவர் எதை அழுத்திச் சொல்கிறாரோ அதற்கு அழுத்தம் கொடுத்தும், குரலில் மாடுலேஷனை மாற்றியும் பேசுவேன். அவர் பேசும்போது 'நான்' என்று தன்னைக் குறிப்பிட்டுச் சொல்கிற விஷயங்களை மொழி பெயர்க்கிறபோது, 'நான்' என்ற சொல்லுக்குப் பதிலாக 'பகவான்' என்ற சொல்லையே பயன்படுத்துவேன்.

"சில தருணங்களில் பகவான் பயன்படுத்தும் தெலுங்குச் சொற்களுக்கு, இணையான ஆங்கில வார்த்தைகள் கிடைக்காமல் நான் தடுமாறியது உண்டு. அதுபோன்ற சமயங்களில் பகவானே சரியான வார்த்தைகளை எடுத்துக் கொடுத்து விடுவார்.

"முதல் தடவையாக பாபா கொடைக்கானல் சென்றிருந்த சமயத்தில்தான் எனக்கு மொழி பெயர்க்கும் வாய்ப்பு கிடைத்தது. சொற்பொழிவில் பாபா பயன்படுத்திய மிக சிம்பிளான 'தெகி' என்ற தெலுங்கு வார்த்தைக்கு, இணையான ஆங்கில வார்த்தை சட்டென்று என் நினைவுக்கு வரவில்லை. உடனே பாபா, 'கட்'(வெட்டு) என்று சுட்டிக் காட்டினார். அதேபோல, 'கட்டு' என்ற வார்த்தைக்குத் திணறியபோது, 'பாண்டேஜ்' என்று எடுத்துச் சொல்லி, என் தடுமாற்றத்தைப் போக்கினார். எளிமையான ஆங்கில வார்த்தைகளுக்குக் கூட நான் சில தருணங்களில் திணறிப்போவதற்குக் காரணம், நான் பாபாவின் தீவிரமான பக்தன். அவர் எனக்குக் கண்கண்ட தெய்வம். நான் இயந்திரம் இல்லை. ரயில்வே ஸ்டேஷனில் ரயில்களின் புறப்பாடு பற்றி அறிவிப்பதைப்போல, மெக்கானிக்கலாக மொழி பெயர்த்துப் பேசுவது

— அனில் குமார் காமராஜு

என்பது சாத்திய மில்லை.

"பாபாவின் சொற்பொழிவு, கூடியிருக்கும் மக்களை எமோஷனல் ஆக்குவது போலவே என்னையும் உணர்ச்சிப் பொங்க வைக்கிறது; ஆனால், எனக்கு மொழி பெயர்க்க வேண்டிய பணியும் இருப்பதால் சில சமயங்களில் தடுமாற்றம் தவிர்க்க முடியாதது ஆகிவிடுகிறது.

"1975ல் நடந்த ஒரு சம்பவம் என்னால் மறக்க முடியாத ஒன்று. ரோட்டரி பவுண்டேஷன் சார்பில், ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து ஆறு வார கால பயிற்சிக்கு அனுப்புவதற்காக ஒரு நேர்முகத் தேர்வு



# நடக்கிற சவால்!

நடைபெற்றது. அதில் நானும் ஒரு விண்ணப்பதாரராகக் கலந்து கொண்டேன். நேர்முகத் தேர்வில் கேட்கப்பட்ட அத்தனை கேள்விகளுக்கும் நான் மிகத் தெளிவாக பதில் சொன்னேன். பகவான் அருளால் நான் தேர்ந்தெடுக்கப்பட்டு, இந்தியாவின் பிரதிநிதியாக அமெரிக்கா சென்று வந்தேன். நேர்முகத் தேர்வில் நான் மிகச் சிறப்பாக பதில் சொன்னதன் மூலகாரணம் என்ன தெரியுமா? அந்தக் கேள்விகள் எல்லாவற்றுக்குமே பகவானின் சொற்பொழிவுகளில் விடை இருப்பதுதான்! எனக்கு விடையளிப்பது மிகச் சுலபமாகி விட்டது!

"1993ல் ஜப்பான், ஹாங்காங், தாய்லாந்து ஆகிய நாடுகளுக்கு, என்னை பாபா அனுப்பி வைத்தார். அங்கே பகவான் பற்றியும், சாயி சமிதிகளின் பணிகள் பற்றியும் நான் பேசிய கூட்டங்களுக்கு மக்கள் திரண்டு வந்திருந்தார்கள். அப்போது, பாபாவுக்கு உலக அளவில் உள்ள மரியாதையைக் கண்டு இனிய ஆச்சரியமும், கடல் கடந்து சென்று பகவானின் பக்தர்கள் மத்தியில் சொற்பொழிவாற்ற எனக்குக் கிடைத்த பாக்கியம் குறித்து நெகிழ்ச்சியும் ஏற்பட்டது.

பகவானின் உடன் இருப்பதும், அவருக்குப் பணி புரிவதும், ஒரு விதத்தில் நெருப்பில் இருப்பதுபோன்ற, கூர்மையான கத்தி முனையில் நடக்கிற சவால்தான். வெகு ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். பகவானுடனான நெருக்கத்தைப் பறைசாற்றிக்கொள்ளுபவருக்கும், அதை சுயலாபத்துக்கோ வர்த்தக நோக்கத்துக்கோ பயன்படுத்திக் கொள்பவருக்கும் அங்கே இடமில்லை."

சந்திப்பு: **மௌலி**

# கிச்சன் கிளினிக்!

மிளகு புகழைத் தொடர்ந்து பாடப் போகிறேன்! மிளகு ரசம் உடம்புக்கு மிகவும் நல்லது. குறிப்பாக உடல் நலக் குறைவாக இருப்பவர்களுக்கு மிளகு ரசம் தரவேண்டும். பருப்பு ரசம், தக்காளி ரசத்தில் கூட சில சிட்டிகைகள் மிளகுப் பொடி சேர்த்துக் கொள்ளலாம்.

தொடர்ந்து பேச வேண்டிய கட்டாயத்தில் இருக்கிற ஆசிரியர்கள், சொற்பொழிவாளர்கள், அரசியல்வாதிகள் போன்றவர்களுக்கு அடிக்கடி தொண்டை பாதிக்கப்பட்டு, இருமல் தொல்லை வரும். அதுமாதிரி சமயங்களில் மிளகு கண்கண்ட மருந்து. ஒரு டம்ளர் பாலை நன்றாகக் காய்ச்சி, அதில் பத்து மிளகை நன்றாகத் தூள் செய்து போட்டு, கொஞ்சம் தேன் கலந்து, சிறிதளவு மஞ்சள் பொடி போட்டுச் சாப்பிட்டால் நல்ல பலன் கிடைக்கும்.

மழை மற்றும் பனி காலங்களில், ரொம்ப 'ஜில்'லென்ற தட்பவெப்பம் நிலவுகிறபோது, ஏதாவது சூடாகச் சாப்பிடலாம் போல இருக்கும். அது மாதிரி சமயங்களில் சாப்பிடுவதற்கு என்றே ஒரு 'சூப்' செய்வார்கள் அந்தக் காலத்தில். பதினைந்து துளசி இலை, இரண்டு கிராம்பு, பத்து மிளகு இவற்றைத் தட்டி தயார் செய்து ஒரு டம்ளர் தண்ணீரைக் கொதிக்க வைத்து மூன்று நிமிடம் கொதித்தபின் அவற்றை இதில் போட வேண்டும். பின்னர் வடிகட்டி, கொஞ்சம் பாலும், இரண்டு ஸ்பூன் தேனும் கலந்து சாப்பிட்டால், விர்ரென்று இருக்கும். இரவு முழுக்க குளிரைப்போக்கி கதகதப்பை அளிக்கும்.

குளிருக்குப் பாதுகாப்பாக உடம்புக்கு கம்பளிப் போர்வை போர்த்திக் கொள்ளுவது போன்றதுதான், உள் உறுப்புக்களுக்கு இந்த துளசி–மிளகு சூப்! இதை சிலர் மிளகு டீ என்று கூடக் குறிப்பிடுவதுண்டு. ஆஸ்த்துமாவால் அவதிப்படுகிறவர்களுக்குக் கூட இந்த மிளகு சூப் உதவி செய்யும்.

இப்போது, நிறைய 'ஃபாஸ்ட் புட்கள்' வந்துவிட்டன. அங்கே எல்லாம் இன்ஸ்டன்ட் ஐட்டங்கள்! இங்கே பயன்படுத்தப்படுபவற்றில் பெரும்பாலானவை கெடாமல் இருக்க வேண்டும் என்பதற்காக, ரசாயன பிரிசர்வேடிவ்கள் அதிகமாகப் பயன்படுத்தப்படும். இதனால் உடலுக்குக் கேடுதான். ஆனால், இவர்கள், உணவைப் பாதுகாக்க மிளகுத்தூளையே பயன்படுத்தலாம். இது உணவுக்கு ருசிசேர்க்கும்; கெடாமலும் பாதுகாக்கும். உடம்புக்கும் ஆபத்து இல்லாதது.



உடல் இளைக்க என்ன செய்வது? இது தான் இன்று பலருடைய கவலை. பலர் தினமும் நடக்கிறார்கள், ஓடுகிறார்கள், நீச்சலுக்குப் போகிறார்கள். டென்னிஸ் போன்ற விளையாட்டுகள் விளையாடுகிறார்கள். இல்லையென்றால் 'டயடிங்' என்ற பெயரில் பட்டினி கிடக்கிறார்கள்.

இன்னும் சிலர் சில ஸ்லிம்மிங் சென்டர்களுக்குப் போய் ஆயிரக் கணக்கான ரூபாய் செலவழிக்கிறார்கள். விலை அதிகம் கொண்ட மாத்திரைகளை வாங்கிச் சாப்

நம் கலாசாரத்தில் தாம்பூலத்துக்கு ஒருதனி இடம் உண்டு. வீட்டில் சாப்பிட்டபின் தினமும் தாம்பூலம் தரிப்பது என்பது முன்பு வழக்கத்தில் இருந்து வந்தது. வெற்றிலையில் இருபத்துமூன்றுவிதமான அமினோ அமிலங்கள் இருக்கின்றன. இந்த அமிலம் தான் நம் உடலில் செரிமானத்தைத் தூண்டக் கூடியது. வெற்றிலையில் உள்ள இந்த அமிலம், நன்கு ரத்தத்தில் கரைய வேண்டுமென்றால், அதற்குத் தூண்டுதலாக இருப்பவை தாம்பூலத்தில் இடம்பெறும் மூன்று விஷயங்கள். அவை கிராம்பு, மிளகு, ஏலக்காய். இந்த மூன்றும் இல்லாத வெற்றிலை, தாம்பூலத்தில் சேர்த்தியே இல்லை. ஆனால், இந்தக் காலத்தில் உபயோகமான இவற்றை விட்டுவிட்டு, உடல் நலத்துக்குக் கேடு விளைவிக்கும் ஜர்தா போன்ற பல சமாசாரங்களைச் சேர்த்து விடுகிறார்கள். மக்களும் அவற்றைச் சாப்பிட்டு, உடல் நலம் கெட்டுப் போகிறார்கள்.

சாப்பிட்டுக் கொண்டே இருக்கலாம். இந்த ரசத்துக்கு மணம், குணம், ஊட்ட, கருவேப்பிலை, கொத்துமல்லி, இஞ்சி இவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம். இந்த மிளகு ரசத்தில் பருப்பைத் தவிர்ப்பது உசிதம். இதைத் தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் மாதத்துக்கு இரண்டு, மூன்று கிலோ வரை கூட உடல் குறையும். இந்த மிளகு ரச மருத்துவத்துக்கு இன்னொரு அதிசய குணம் உண்டு. உடலில் உள்ள அதிகப்படியான கொழுப்பு எடைதான் குறையுமே தவிர, சராசரியான எடைக்குக் கீழே குறையாது. இதன் காரணம், மருத்துவர்களுக்கே விளங்காத ஒரு புதிர்தான்!

பெண்களுக்கு மாதவிலக்கு நின்று போகிற மெனோபாஸ் சமயத்தில், இடுப்பிலும், முழங்காலுக்குமேலும் அதிகப்படியான சதைபோடும். அப்போது, இந்த மிளகு வைத்தியம் மூலம் அதிகப்படியான கொழுப்பை உதறிவிடமுடியும்.

மஞ்சளைப் பற்றிச் சொன்னதைப் படித்துவிட்டு, பலரும் அட! சாதாரண மஞ்சளுக்குள் இத்தனை அதிசயங்கள் அடங்கியுள்ளதா? என்று ஆச்சரியமாய்க் கேட்டார்

# டாக்டர்களுக்கு விளங்காத புதிர்!

பிடுகிறார்கள். கடைசியில் 'பர்ஸ் இளைத்ததே தவிர உடம்பு இளைக்கவில்லையே' என்று ஆதங்கப்படுகிறார்கள்.

நீங்கள் என்னோடு வாருங்கள். உங்கள் வீட்டிலே இருக்கிற கிச்சன் கினிக்கிற்கு! உடல் இளைக்க நான் சொல்கிறேன் மருந்து. தினமும் காலை சுமார் பதினோரு மணியளவில் மிளகு ரசம் ஒரு டம்ளர் பருகுங்கள். அது போதும். எத்தனை நாள் சாப்பிடவேண்டும் என்று கேட்காதீர்கள்! தினமும்



கள். அதுவும், ரத்த அழுத்தத்துக்கு நான் வகுத்துள்ள மஞ்சள் ட்ரீட்மென்ட் பலருக்குப் புது உற்சாகத்தைக் கொடுத்துள்ளது. அதில், சாம்பார், ரசம் இவற்றில் மிளகு, மஞ்சள் பொடி முப்பது சிட்டிகை சேர்க்க வேண்டும் என பிரசுரமாகியுள்ளது. மூன்று அல்லது ஐந்து சிட்டிகையே போதுமானது.

அடுத்து வெந்தயம்! இதன் மகத்துவத்தை அடுத்த வாரம் பார்க்கலாம்.

படங்கள்: யோகா



'மூலிகைமணி' டாக்டர் க. வேங்கடேசன்

டாக்டர் க.வே. அபிராமி

# "ஹிந்தி மொழியில் பேச அஞ்சல் வழியில் கற்கலாம்"

**'யா**மறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்' என்று உரைத்த பாரதியார் நம் தேசத்தின் பெரும்பாலான மொழிகளை அறிந்திருந்தார்.

"செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே"

அது சரி, காதில் தேன் பாய்ந்தால்




• 26.9.2000 அன்று நடந்த பட்டமளிப்பு விழாவில்...

எப்படி இருக்கும்? (எறும்பு வரும் என்று நினைக்கிறீர்களா?) நம் மொழி பேசாத மாநிலத்திற்கு நாம் சென்றால் நம்மைச் சுற்றி புரியாத ஒரு மொழியைப் பேசுகிறார்கள். அந்தச் சூழலில் திடீரென ஒருவர் நம்மிடம் வந்து "அட நீ எங்கே இங்கு வந்தாய், எப்படி இருக்கிறாய்?" என்று தமிழில் கேட்டால் எப்படி இருக்கும். காதில் தேன் வந்து பாய்வது போல் தானே இருக்கும். இதைத்தான் கவிஞர் 'இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே' என்றார்.

உலகில் மற்றவர்களின் இதயத்தில் இடம் பிடிப்பதற்கு ஒரே வழி 'அவர்களுடைய மொழியில் பேசுவதுதான்.' உலக அழகி என அழைக்கப்படும் இளியோபாட்ரா பல மொழிகளில் பேசும் திறமை பெற்றிருந்தவர். அவர் நம் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் மிளகு, இலவங்கம் போன்ற பொருட்களை வாங்கும் போது இந்திய மொழிகளில் பேரம் பேசி வாங்குவாராம். அவருடைய அறிவில் மயங்கியவர் பலர். அவரது அறிவுத் திறமையை மற்றவர்களுக்கு வெளிச்சமிட்டுக் காட்டியது அவரது பன்மொழித் திறமையே. இந்தியாவில் பலமொழிகள் பேசப்படுகின்றன. தமிழகத்தை விட்டு வெளியே போனால் 'அட நாம் பல மொழிகளைக் கற்காமல் விட்டுவிட்டோமே' என்ற எண்ணம் தோன்றுகிறது. இந்தியாவில் பெரும்பாலான மாநிலங்களில் ஹிந்தி மொழி பேசப்படுகிறது. ரயில் டிக்கட் வாங்கச் செல்லும் போதும், வேறு ஏதாவது பொருட்கள் வாங்கச் செல்லும் போதும், பொது இடங்களில் ஹிந்தி மொழி தெரிந்திருந்தால் நம் வேலை சுலபமாகிவிடும். இதைத் தவிர வேலை தேடி மற்ற மாநிலங்களுக்குச் சென்றால், கல்வி தகுதியுடன் ஹிந்தி மொழி பேசத் தெரிந்திருந்தால் வேலை கிடைப்பது மிக எளிதாகி விடுகிறது.

நம் தமிழ் மக்கள் அறிவுக் கூர்மை அதிகம் உடையவர்கள். பல விஷயங்களைக் கற்பதிலும் சரி, கற்பிப்பதிலும் சரி, அவர்களுக்கு இணை அவர்களே. அவர்களது அந்த அறிவு குடத்திலிட்ட விளக்கு போன்று உள்ளது. இந்த விளக்கைக் குன்றின் மீது ஏற்றிட **'பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கப் பயிற்சி மையம்'** பேச்சு மொழி ஹிந்தி டிப்ளமா பயிற்சியை நடத்தி வருகிறது.

'Diploma in Conversational Hindi' என்று அழைக்கப்படும் இப்பயிற்சி அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எந்த இடத்திலிருந்தும் ஹிந்தியில் பேசக் கற்றுக் கொள்ளலாம். அதாவது பயிற்சியில் சேருபவர்களின் விலாசத்திற்கு ஒவ்வொரு மாதமும் பாடங்கள் கூரியர் மூலம் அனுப்பப்படும். இப் பாடத்தைத்

தவிர பேச்சு மொழி சம்பந்தப்பட்ட புத்தகங்களும் மற்றும் தமிழ் மூலம் பயிலுபவர்களுக்குப் பேச்சு மொழி ஹிந்தி சொற்களஞ்சியம் என்ற புத்தகமும் ஆங்கிலம் மூலம் கற்பவர்களுக்கு 'Conversational Hindi word finder' என்ற புத்தகமும் வழங்கப்படுகிறது. இதைத் தவிர மாதா மாதம் நடக்கும் நேர்முக வகுப்புகளில் பேச பயிற்சி அளிப்பதுடன் மொழி சம்பந்தப்பட்ட சந்தேகங்களுக்குத் தெளிவு செய்யப்படுகிறது.

இந்த நேர்முக வகுப்புகள் மாதம் ஒருமுறை ஞாயிற்றுக் கிழமைகளில் (மதிய உணவுடன்) நடத்தப்படுகிறது. நேர்முக வகுப்புகளுக்கு வரமுடியாதவர்களுக்கு உதவியாக Resource centres (மொழி விளக்க மேம்பாட்டு மையங்கள்) திருச்சி, கோவை, மதுரை, தில்லி, ஐதராபாத், மும்பை போன்ற பல இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன. இதைத் தவிர ஒலி நாடாக்களும் வெளியிடப்பட்டுள்ளன.

பயிற்சி காலம் : 6 மாதம்

பயிற்சி கட்டணம் : ரூ. 425/- மட்டுமே (தேர்வு, நேர்முகப் பயிற்சிக் கட்டணம் உட்பட)

மொழி ஆர்வம் உடைய எவரும் இந்தப் பயிற்சியில் சேரலாம். ஹிந்தி மொழி ஆரம்பம் முதல் கற்பிக்கப்படுவதால் அடிப்படை கல்வித் தகுதி, வயது வரம்பு எதுவும் தேவையில்லை. (பள்ளி சிறுவர்கள் முதல் ரிடையர் ஆகி வீட்டில் இருப்பவர் வரை ஆர்வமுடைய அனைவரும் சேரலாம்). **இப் பயிற்சி தமிழ் மற்றும் ஆங்கிலம் மூலம் நடத்தப்படுகிறது.**

பயிற்சியில் தேறியவர்களுக்கு வருடா வருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் 'Diploma in Conversational Hindi' சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. இப்பட்டமளிப்பு விழாவில் இதுவரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் சந்திரசேகர், மறைந்த பாரத ரத்னா சி. சுப்பிரமணியம், டாக்டர் கிரண்பேடி I.P.S. போன்றவர்கள் முக்கிய விருந்தினராக உரை நிகழ்த்தியுள்ளனர். 26.9.2000 அன்று நடந்த பட்டமளிப்பு விழாவில் பேசிய டாக்டர் கிரண்பேடி I.P.S., "சென்னை மாநகரம் பல மொழிகளை வளர்க்கும் கலாசாரத்தைக் கொண்டுள்ளது. இங்கு அமைந்துள்ள பாரத ஸ்டேட் வங்கி அதிகாரிகள் சங்கம் தங்கள் உறுப்பினர்களுடன் இணைந்து ஒரு தேசிய ஓட்டத்தை உருவாக்கி சிறந்ததொரு வளர்ச்சியில் ஈடுபட்டுள்ளது" என்று பாராட்டினார்.

ஜனவரி 2001ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் ரூ.75/-க்கான டிமாண்ட் டிராப்ட் SBIOA



Institute Chennai என்ற பெயரில் எடுத்து, சுயவிலாசமிட்ட தபால் தலையுடன் கூடிய உறையுடன் கீழ்கண்ட முகவரிக்கு எழுதவும். உறையின் மேல் English Medium/Tamil Medium என்று பயிற்சி மொழியைக் குறிப்பிடவும்.

**The Executive Director,**
**SBIOA Institute,**
**229, N.S.C. Bose Road,**
**P.B.No: 1279,**
**Chennai - 600 001.**
**Ph: 5340226.**

Advt

என்னவாகிவிட்டது தனக்கு என்று யோசித்தார் அப்புசாமி. ஒரு பத்து நாட்களுக்குப் பிரச்னையே இல்லாத அளவுக்கு நேற்றைய தினம் எதிர்பாராமல் நிறைய வருமானம் அகப்பட்டதுதான் காரணமா என்றும் நினைத்தார். சலிப்பும், இலக்கற்ற வெறுப்பும் இயந்திரத்தனமுமாகவே பொழுது களைத் தொடங்குவது அவர் வழக்கம். மாறாக அன்று ஒரு சிறு குதூகலம் உதித்திருப்பதாகப்பட்டது. கோயிலிருந்த திசை நோக்கி ஒரு கும்பிடு போட்டார். உதடுகள் தன்னிச்சையாக ஐதரேய பிரம்மணத்திலிருந்து சில வரிகளை முணுமுணுத்தன.

அமர்ந்திருப்பவனின் அதிர்ஷ்டம் அமுங்கிவிடுகிறது; வளருவதில்லை. எழுந்து நடப்பவனின் அதிர்ஷ்டம் மேன்மேலும் ஓங்குகிறது. உறங்குபவனின் அதிர்ஷ்டமும் உறங்கிப் போகிறது. தூங்குபவன் கலியில் இருக்கிறான். உறக்கம் உதறியவன் துவாபர யுகத்திலிருக்கிறான். எழுபவன் திரேதா யுகமும் நடப்பவன் சத்யயுகமும் அடைகிறான்.

'சரைவேதி! சரைவேதி'* என்று கலோகத்தின் இறுதிச் சொற்களை ஒரு பிரகடனம் போலச் சொல்லிக் கொண்டு வேகமாக இறங்கி நடக்க ஆரம்பித்தார்.

முந்தைய தினம் நள்ளிரவு வரை அவருக்கு உறக்கம் வரவில்லை. உமாவும் நீலுப்பாட்டியும் கூடத்தில் ஆளுக்கொரு தூண் ஓரம் சுருண்டு கிடக்க, நெடுநேரம் அவர்களைப் பார்த்துக் கொண்டே அமர்ந்திருந்தார் அப்புசாமி.

இந்தப் பெண்ணுக்கு வரன் பார்க்க ஆரம்பிக்க வேண்டு

# அலை உறங்கும் கடல்

மென்ற எண்ணம் தவிர்க்க முடியாமல் வந்து அவர் மனத்தில் ரீங்காரமிட்டது. இருபது வயதுதான் ஆகிற தென்ற போதிலும் இன்னும் தள்ளிவைப்பத னால் நேரக்கூடிய அபாயமேதும் இவளி டமும் உண்டா? என்று யோசித்தார். ஒரு யுகப் புயலாக மனத்தில் மோதிச் சென்றது அகிலாவின் நினைவு. காதல் வயப்பட்டிருப்பதன் சிறு அறிகுறிகளைக் கூடக் காண்பிக்காமல் வளைய வர முடிந் திருக்கிறது அவளால். அல்லது தன்னால்தான் உணர முடியாதிருந்து விட்டதோ? துளிப் பதற்றமும் இல்லாமல் இந்த அத்தைக் கிழவி அதை எதிர் கொண் டாளே? ஒரு வேளை அவள் அறிந்திருக்கக் கூடுமோ?

பெற்றதும் சோறளித்ததும் தவிர ஒரு தந்தையெனத் தான் செய்ததுதான் என்ன? என்று யோசித்துப் பார்த்தார். தன் முகத்தின் நிரந்தர முகடுத் தனம்தான் குழந்தைகளை நெருங்கவிடாமல் அடித்து விட்டதோவென நினைத்தார். உடனே எழுந்த தன்னிரக்கம், வந்த சூட்டிலேயே தணிந்தும் போனது.

இப்படியெல்லாமும் இவர்கள் குறித்து உறக்கமில்லாமல் யோசிப்பதிலிருந்தே தானொரு சரியான தந்தையாகத்தான் இன்னுமிருப்பதாக நினைத் தார்.

அதிகம் வேண்டாம். ரொக்கமாக ஐம்பதாயிரமிருந் தால் போதும். கொஞ்சம் நகைகளும் தட்சிணையெனக்



**பா. ராகவன்**

* நடந்து கொண்டே இரு.

கிடைத்த சில வெள்ளிப் பொருட்களும் வீட்டிலிருக்கின்றன. ஆடம்பரமில்லாவிடினும் சாஸ்திரக் குறைவில்லாமல் உமாவின் திருமணத்தைக் கோஸ்வாமி மடத்தில் வைத்தே முடித்து விடலாமென்று நினைத்தார்.

# 17

உடனே அவர் மனத்தில் தன்னொத்த சாஸ்திரிகளாக வளைய வருவோரில் உமாவுக்குப் பொருத்தமானவனாக யார் இருக்கக் கூடுமென்கிற சிந்தனை உதித்தது.

திலீப் சாஸ்திரிகள் இருக்கிறான். இளைஞன். துடிப்பானவன். மகாதேவனும் ரமணனும் கூடச் சரியாகத்தான் இருப்பார்கள். மேல வீதி குன்னகனபாடிகளின் மகன் பொருந்திவந்தால் மறுகேள்விக்கே வாய்ப்பில்லை.

ஒரு புரட்சிக்கு மனம் தயாரானால் யாரேனுமொரு மகாராஷ்டிர பிராமணனைப் பார்க்கலாம். இத்தனை நூறு வருஷங்கள் ஆன பிறகும் கோவில் நிர்வாகம் அவர்கள் கையில் தான் இருக்கிறது. காரியம் செய்து பிழைப்பதைத் தவிர தமிழ் பிராமணர்களுக்கு வேறு வக்கில்லை என்று மகாராஜாக்கள் கருதினார்களோ, தேவதைகளே முடிவு செய்தனவோ தெரியவில்லை. கர்ப்பகிரகத்துக்குள்ளே செல்லும் பாத்யதை முழுக்க அவர்கள் வசமே தான் உள்ளது.

உற்சவ காலம்- புறப்பாடு சமயமென்றால் தமிழ் அந்தணர்கள் ஏளப்பண்ணுவதுடன் சரி. பல்லக்கிலாகட்டும், தேரிலாகட்டும்- ராமநாதருக்கு மகாராஷ்டிர பிராமணர்கள்தான் வேண்



''மாயவரம் ஸ்டேஷன் வந்ததும் கொஞ்சம் சொல்லுங்க. இறங்கணும்...''

''நீங்க நிம்மதியா படுங்க. அது வந்ததும் நான் சொல்றேன். இப்பத்தான் மயிலாடுதுறை போச்சு.''

– பர்வதவர்த்தினி

---

டப்பட்டவர்களாயிருக்கிறார்கள்.

எண்ணிப்பார்க்க உவப்பாயில்லாதிருந்த போதிலும் வருமானமென்று வரும்போதும் முன்னணியில் அவர்களே இருக்கிறார்கள்.

"எல்லாம் பூர்வஜென்ம சுகிர்தம்" என்பாள் நீலுப்பாட்டி.

"கோயில் காரியம் மரபு சம்பந்தப்பட்டது. விபரீதமான யோசனையெல்லாம் ஏன்யா உமக்கு?'' என்று நீலகண்ட சாஸ்திரிகள் ஒருமுறை அப்புசாமியிடம் சொன்னார்.

தனக்கில்லாவிட்டாலும் உமாவுக்கு அப்படியொரு வரன் அமைந்தால் ஆழாக்கு அரிசிக்கும் வாழை, வெண்டைக்கும் அவன் யாத்ரிகர்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டியிராது.

இதற்கும் மேலாக ஒரு அரசு ஊழியன் அகப்படுவானென்றால், அது ஒரு பெருங் கனவு. அந்தக் கணமே தன் தொழிலை நிறுத்தி விட்டுத் தேசாந்திரியாகப் போய்விடலா மென்று நினைத்தார். எதுவும் நாம் எண்ணி, கூடி வருவதா என்ன? நீலுப்பாட்டியின் குரல் தான் மீண்டும் அவருக்குள் ஒலித்தது– பூர்வஜன்ம சுகிர்தம்.

**அ**க்னிதீர்த்தக் கரையில் சமுத்திரம் ததும்பித் ததும்பி வந்து நிலம் நனைத்துக் கொண்டிருந்தது. அப்புசாமி தன் இடத்தில் சிறு கோரைப்பாய் விரித்து அமர்ந்தபோது இரண்டாம்படி சேதுமாதவன் தவிர வேறு யாரும் இன்னும் வந்திராததைக் கண்டார்.

"என்னவோய், சுப்புணியாத்துக் கல்யாணத் துக்கு நீர் போகலையா?" என்று சேதுமாதவன் கேட்டார்.

"அடடா!" என்றார் அப்புசாமி. "மறந்தே போச்சேடா? சரி; ரிசப்ஷன் உண்டில்லியா? சாயந்திரம் போயிக்கறேன்" என்று தனக்கே கூறிக் கொள்பவராகச் சொன்னார். ஆன போதிலும், இன்று எட்டு மணி வரையில் போட்டியில்லாமல் யாத்ரிகர்களை மொத்த மாக வளைக்கலாமென்ற உணர்வே மற்றெல் லாவற்றை விடவும் மேலோங்கி நின்றது.

சுப்புணி சாஸ்திரிகள் மகளுக்கு ஆறு ஏழரை முகூர்த்தம். பாம்பனில் சத்திரம் பிடித்து, வைத்திருந்தார். டிபன் முடிக்காமல் தோழர்கள் வரப் போவதில்லை. அதற்குள் நாலைந்து ஹிந்திக்காரனாவது அகப்பட்டால் தேவலை என்று நினைத்தார்.

பொழுதுக்கு ஐந்நூறு ரூபாய் வந்தால் கூட லாபந்தான். கடையைக் கட்டிக் கொண்டு இப் படியே கோயிலடியில் பஸ் பிடித்துப் போய் கல்யாண வீட்டிலும் தலை காட்டிவிட்டு வந்து விடலாம். ஆனால் ஆசீர்வாதமென்று ஏதா வது செய்தாக வேண்டும். பதினோரு ரூபாய். இருபத்தொரு ரூபாய்.

"நீர் போகல்லியா?" என்று அப்புசாமி சேது மாதவனைத் திருப்பிக் கேட்டார்.

"டெர்ம்ஸ் சரியில்லை கொஞ்ச நாளா. பத்திரிகையே கொடுக்கல்லே" என்றார் இலே சான வருத்தமுடன்.

"அய்யோடா! என்னாச்சு? எனக்கொண் ணுந் தெரியாதே இந்த விவரமெல்லாம்?" என்று அப்புசாமி கேட்டார்.

"ஊருக்கே தெரியும்! நீர் என்னவோய்! சமாசாரமென்னன்னா, காஞ்சிபுரத்துல அவரோட ஷட்டகர் வைதிகம் பார்த்துண்டி ருக்காராம். வேறென்ன? வருமானஞ் சரி யில்லை. இங்க வந்துடும், வந்துடும்னு இவர் பேச்சுக்கு சொல்லியிருக்கார். இப்ப அவன், சரி வரேன்னுட்டானாம். புதுசா மெம்பர்ஷிப் கார்டு போடணும்னு அசோசியேஷன் செகரட்டரி காதைக் கடிச்சிருக்கார்..."

"அதெப்படி? வேத்தாளுக்கு அனுமதிக் கறதில்லியே? வாரிசுன்னா சரி" என்றார் அப்பு சாமி.

"அதே தான் நானும் சொன்னேன். நீர் ஆரமிச்சு வெச்சீர்னா ஆளுக்கொரு ஷட்ட கரையும் மச்சினனையும் கூட்டிண்டு வந்து டுவா. இதெல்லாம் சரிப்படாது. அனுமதிக் காதீங்கன்னேன். இது தப்பா?"

"யார் சொன்னா தப்புன்னு?"

"அவர்தான். சுப்புணி சாஸ்திரி மேல எனக்கென்ன தனி விரோதம்? ஆனா, கட்சி கட்டிண்டு அவர் சப்போர்ட்டுக்கு நாலு பேரைப் பேசச் சொல்றார்."

"அட ராமா! என் காதுக்கு எட்டலையே இந்த விவகாரம்?"

"நீர் எங்க அசோசியேஷன் பக்கம் வரீர்? ஆத்தைவிட்டா அக்னி தீர்த்தம். இங்கேருந்து கிளம்பினா தெக்குமாட வீதி. ராஜீவ் காந்தியை

பாம்வெச்ச ஒரு பொம்மனாட்டி கொன்னுட்டானாம். இதையானா கேள்விப் பட்டீரா இல்லியா?"

"எல்லாந்தெரியும்" என்றவர், "நடராஜ புரத்துல நேத்திக்கு ராத்திரி ஒரு போட் வந்துதாமே!" என்றார்.

"ரெஃப்யூஜீஸ் போட்டா தெரியலை. வேற என்னவோ சமாசாரம். படகு கரை தட்டி நிக்கறது. ஆள் யாருமில்லேன்னான் ராஜு."

"அவன் பார்த்தானாமா?"

"ஆமா. விடிகாலம்பற மூணு மணிக்கு அரவங் கேட்டதாம். எழுந்து போய் சமுத்திரக் கரைல பார்த்திருக்கான். வந்தது யாருன்னு தெரியாமலேயே மோட்டார்ல ஏறிப் பறந்தாச்சு."

"இங்க வாழறதா வேண்டாமான்னே பயம்மா இருக்கு" என்றார் அப்புசாமி.

"யார் கட்டாயப்படுத்தறா? நீர் நகர்ந்தீர்னா, உம்ம படிக்கட்டை கெட்டியா பிடிச்சுண்டு சுப்புணியார் ஷட்டகருக்கு ரிஸர்வ் பண்ணிப்பிடுவர்" என்று சிரித்தார் சேதுமாதவன்.

சில நிமிடங்களில் இருவருக்குமே யாத்திரிகர்கள் இடைத்து அமர, பேச்சு நின்று மந்திரம் ஒலிக்கத் தொடங்கியது.

ஏழு ஐம்பது பஸ்ஸில் மொத்த அக்னிதீர்த்தவாசிகளும் சாத்துகுடிப் பழ கவருடன் வந்திறங்க, கல்யாணக் கதை பேசியபடியே வேலையைத் தொடங்கினார்கள்.

அப்புசாமிக்குத் தலைவலித்தது. காப்பியுடன் உமா வருகிறாளா என்று நொடிக்கொரு தரம் பார்த்துக் கொண்டே இருந்தார். எழுந்து போய் அபிராமியில் ஒரு காப்பி சாப்பிட்டு வந்தால் கூடத் தேவலை போலிருந்தது.

முந்நூறு ரூபாயும் இரண்டு கிலோ அரிசியும் எட்டு வாழைக்காய்களும் அதுவரை அவரிடம் சேர்ந்திருந்தன. இது போதும். இதே மாதிரி தினமும் வாய்த்துவிட்டால் கூடப் போதும். பேராசைதான் ஆனாலும் உமாவின் திருமணம் வரையிலாவது தனக்கு அது இன்றியமையாததென அவர் கருதினார்.

சென்ற வாரம் வரையிலுங்கூட அவர் இப்படிக் குடும்பக் கவலை படவில்லை. வருமானம் வரவேண்டுமென்கிற சிந்தனை, சுவாசிக்க வேண்டுமென்பது போன்றதொரு அனிச்சை செயலாகியிருந்தது. வரும் பணமெல்லாம் கையில் நிற்காமல் எங்கே சென்று மறைகிறது என்கிற குழப்பமும் தீராமலிருந்தது. மற்றபடி, மகளைப் பற்றியோ, அவள் எதிர்காலம் குறித்தோ, அவர் அதிகம் அலட்டிக் கொண்டதில்லை.

ஆரம்பக் காலங்களிலெல்லாம் சொந்தமாக ஒரு வீடு வாங்க வேண்டுமென்ற எண்ணம் மேலோங்கியிருந்தது. அதெல்லாம் உமாவின் அம்மா உயிருடன் இருந்து தூண்டிவிட்ட நோக்கம். அவள் இறந்தபோது அந்த யோசனையையும் சேர்த்து வைத்தே தான் எரித்தார்.

எவனிடம் சேமிப்பு எதுவுமில்லையோ அவன் கடவுளுக்கு நெருக்கமானவன் என்று பாகவதம் சொல்கிறது. கடவுளின் அண்மை இத்தனை வெறுப்பும் விரக்தியும் தரக் கூடியதா என்ன என்று அப்புசாமி யோசித்தார். மேலும் தலை வலித்தது.

என்ன ஆயிற்று உமாவுக்கு? சரியாக எட்டடித்ததும் காப்பி கூஜாவுடன் வந்து விடுவாளே? இன்று எங்கே போய்த் தொலைந்து விட்டாள்?

"அப்பு அய்யரே! இன்னிக்கி மளெ வருது பாரும். அங்க பாரும்!" என்று சங்குக் கடை ராஜு தன் கடை வாசலிலிருந்து குரலெடுத்துக் கத்துவது கேட்டு நிமிர்ந்தார் அப்புசாமி.

அங்கே, ஒரு நாளுமில்லாத அதிசயமாக நீலுப்பாட்டி வந்து கொண்டிருந்தாள்.

"சொல்றேன் கேட்டுக்கோ. சாகறமுட்டும் அக்னிதீர்த்த மண்ணை நான் மிதிக்கமாட்டேன். அவாவா மந்திரஞ்சொல்லி, காத்தோட மாசை நீக்கி விடுவா. இங்கதான் மந்திரத்தையே அசுத்தப்படுத்தற காரியம் நடந்துண்டிருக்கு" என்பாள் நீலுப்பாட்டி.

சாகிற வரை வரமாட்டேன் என்றவள் இன்று வருகிறாளென்றால்- கடவுளே! மண்டையைப் போடப் போகிறாளா என்ன?

அப்புசாமி குழப்பமும் சிறு புன்னகையுமாக எழுந்து கொண்டார்.

நீலுப்பாட்டியின் கையில் காப்பி கூஜா இருந்தது.

"என்னாச்சு அவளுக்கு? நீ ஏன் வந்தே?" என்று கேட்டார்.

---



"உங்க பையன் லவ் பண்றான்னு எப்படி கண்டு பிடிச்சீங்க?"

"முன்னாடியெல்லாம் என் சட்டை பாக்கெட்லயிருந்து தினம் பத்துரூபா காணாமல் போகும். இப்பல்லாம் ஐம்பது ரூபாய் காணாமல் போகுதே!"

- பூனாம்பாளையம் ஆர்.பி. ஜெயச்சந்திரன்

"சொல்றேன். சித்த இப்படி வா" என்று அவரைப் படியேறி வரச் சொன்னாள் நீலுப்பாட்டி.

"என்ன அத்தே?" என்று மேலேறி வந்த படியே இடுப்பு வேட்டியை இறுக்கிக் கொண்டார்.

"ஒண்ணுமில்லே. முதல்ல காப்பியைச் சாப்பிடு; சொல்றேன்."

இன்று ஏன் எல்லாமே புதிதாக நடந்து கொண்டிருக்கிறது என்கிற யோசனையுடன் காப்பியை ஆற்றி அருந்தி முடித்து நீட்டியவர். "சொல்லு?" என்றார்.

"ரெண்டு நிமிஷம் என்னோட நீ வரணும்" என்றாள் நீலுப்பாட்டி.

"எங்கே?"

"கோயில் வரைக்கும்."

"என்னத்துக்கு?"

"சமாசாரமிருக்கு. வருவியா, மாட்டியா?"

ஏனோ அவருக்கு இம்முறை சிடுசிடுக்கத் தோன்றவில்லை. மாறாக, புன்னகையுடனே தீராத வியப்பும சேர அவளைப் பார்த்தார்.

"புதுசா இதென்ன நடக்கறது?" என்றபடி உடன் செல்ல ஆரம்பித்தார்.

கோயிலை அடைந்து, பிரகாரங்களைக் கடந்து அம்பாள் சந்நிதியை




◆ **அகந்தைத் தோல் அகற்றி, தன்னல விதை நீக்கி, அன்புக் கனியை உண்டு மகிழவேண்டும்.**

அடையும் வரை அவள் ஏதும் பேசவில்லை.

"முதல்ல நன்னா சேவிச்சுக்கோ. தாயே என் புத்திக்கு ஒரு குளுமையைக் குடுன்னு வேண்டிக்கோ. ரெண்டு எருமை வயசானாலும் இதையெல்லாம் நான் சொல்லணும்னு எழுதியிருக்கு" என்று சம்பந்தமில்லாமல் ஒரு சிறுவனுக்கு அறிவுரை கூறுவது போலப் பேசிய நீலு. சட்டென்று அவர் கைகளைப் பிடித்துக் கொண்டு, "இப்ப உங்கிட்ட ஒரு வரம் கேக்கறேன். செய்வியா?" என்றாள், உதடு துடிக்க.

"உனக்கு என்ன ஆச்சு அத்தே! ஏன் இப்படியெல்லாம் பண்றே, காலங்கார்த்தால என் பிழைப்பைக் கெடுத்துண்டு?" என்று அப்புசாமி கேட்டார்.

"பிழைப்பைக் கெடுக்கலைடா பாவி! ஒரு நல்லகாரியம் நடக்கப் போறது. முதல்ல நீ சொல்லு, நான் கேட்கறதைச் செய்வியா?"

"சொல்லு" என்று தயங்கிச் சொன்னார் குழப்பமுடன்.

"செய்யறேன்னு இந்த க்ஷணம், இந்த சந்நிதில சத்தியம் பண்ணு."

ஒரு கணம் அவளை உற்றுப் பார்த்த அப்புசாமி, இவள் என்ன பிரகிருதி என்று யோசித்தார். போடுகிற சோற்றுக்கு ஒரு பூனைக்குட்டி குரல் கொடுப்பதுபோல எப்போதும் வீட்டில் ஒலிக்கிறது நீலுப் பாட்டியின் குரல். தன் இருப்பைத் தன் குரல் மூலமாக மட்டுமே காண்பித்துக் கொள்ளும் ஒரு பிரகிருதி எதைக் கண்டு இப்படிப் பரவசமானாள்? ஏன் தன்னிடம் இரந்து நிற்கிறாள்?

அவருக்கு முற்றிலும் புரியவில்லை.

"சொல்லுங்கறேனில்லை? நான் கேக்கறேன்னா கேப்பேன்."

அவள் "சத்தியந்தானே?" என்று மீண்டுமொருமுறை உறுதிப் படுத்திக் கொண்டு, "இன்னிக்கு ஒரு நாள் உன் புரோகிதம் படுத்தாகுடி முழுகிடாது. என்னோட வா" என்று அவர் கையைப் பற்றிக் கொண்டு நடக்க ஆரம்பித்தாள்.

"கெழவி, நீ என்ன நினைச்சுண்டிருக்கே?" என்று இரைந்தார் அப்புசாமி.

"முட்டாள்! ஆத்துக்கொரு அதிதி வந்திருக்கா. வாடா முதல்லே!" என்று ஆணையிடும் தொனியில் கூறினாள் நீலுப்பாட்டி.

"அதிதியா?"

"ஆமா! அதிதிதான். அப்படித்தானே ஆயாச்சு. நீ வா சொல்றேன். ஆனா ஒண்ணு. வந்து தையதக்கான்னு குதிக்கக் கூடாது. வந்தவாளை 'வா'ன்னு கூப்பிடணும். சத்தியம் பண்ணினது இதுக்குத்தான்..."

அப்புசாமி சட்டென்று நின்றார். "இப்ப நீ யாருன்னு சொல்லப் போறியா, இல்லியா?"

"மாட்டேன். கண்டிப்பா மாட்டேன். நாலெட்டு நடந்து நீயே தெரிஞ்சுக்கோ. 'ஏசி கார்'ல வந்து இறங்கியிருக்கா."

இம்முறை அப்புசாமி பதில் பேசவில்லை. அவளை முந்திக்கொண்டு விறுவிறுவென நடக்க ஆரம்பித்தார்.

நீலுப்பாட்டி சொன்னது போலவே வீட்டு வாசலில் புத்தம்புதிய கார் ஒன்று நிற்கக் கண்டவர், குழப்பமுடன் அதனைப் பார்த்துக் கொண்டே படியேறினார்.

கூடத்தில் பாண்ட், சட்டை அணிந்த உருவமொன்று வாசலுக்கு முதுகு காட்டிக் கொண்டு நின்று கொண்டிருக்கக் கண்டவர், "யாரு?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார்.

அரைக் கணம் தான்.

இணைற்றடியிலிருந்து "அப்பா..." என்று குரல் கொடுத்தபடியே உமா ஓடி வந்தாள்.

கூடத்தில், சுவரோரம் குந்திட்டு அமர்ந்திருந்த அகிலா எழுந்து நின்று புன்னகை செய்தாள்.

(தொடரும்)




# தலைவணங்குகிறேன்!

✉ தலையங்கம் மிக அருமை. நாட்டின் மிகப் பழமையான அனுபவம் மிக்க கட்சியான காங்கிரஸ், இன்று பலமிழந்து போனதற்குக் காரணம், உட்கட்சி ஜனநாயகத்தைத் தனி நபர் ஆளுமைக்குத் தாரை வார்த்து விட்டதுதான் என்பதைப் படித்த பிறகாவது தனி நபர் தலைமைக்கு ஜால்ரா போடும் சுயநலவாதிகள் திருந்துவார்களா?
**சீர்காழி,** **கே.ஆர்.வெங்கடேஷ்**

✉ எழில்மிகு சென்னைபற்றி மாநகராட்சி ஆணையர், எதிர்க்கட்சித் தலைவர் இவர்களது கருத்தை நடுநிலையாக வெளியிட்ட 'கல்கி'யின் செயல் பாராட்டும்படியாக உள்ளது.
**ஈரோடு,** **கன்னி.சுப்பிரமணியன்**

✉ பிறமொழியில் வெளியாகும் சில நல்ல படங்களையும் தேடிப் பிடித்து விமர்சனம் செய்வது கல்கியின் நல்ல பழக்கங்களில் ஒன்று. அந்த வரிசையில் நீங்கள் எழுதியிருக்கும் 'மிஷன் காஷ்மீர்' இந்திப் பட விமர்சனம் மிக அருமை.
**மொரட்டுப்பாளையம்,**
**க.நா.இராஜேஸ்வரன்**

✉ 'அழைக்கிறது அமெரிக்கா' - குவிஸ் போட்டியை வரவேற்கிறோம். அதுசரி அதென்ன '26 வாரம்'. ரொம்ப 'லாங்'காக இருக்கிறதே. அமெரிக்கா ரொம்ப தூரம் என்பதாலா?
**விருதுநகர்,** **இரா. சந்திரசேகரன்**

✉ 12.11.2000 இதழில் 'பத்து, ஜன்பத்துக்குப் பக்கத்து வீடு' படித்தேன். சாஸ்திரியாரின் எளிமை கண்டு வியப்படைந்தேன். அரசியல்வாதி என்றாலே ஆடம்பரம் என்ற நிலையைப் பற்றிச் சிறிதும் எண்ணாமல் 'எளிமை' என்ற நகையை அணிந்த சாஸ்திரியாரின் குணத்திற்குத் தலை வணங்குகிறேன்.
**ஆதமங்கலம்,** **பிருந்தா**

✉ ஜோதிபாசு பற்றிய பி.எஸ்.ராகவனின் மலரும் நினைவுகள், தொடர்ந்து இருபத்திமூன்று ஆண்டுகளாக அவர் முதலமைச்சராக இருந்ததன் ரகசியத்தைப் புரிய வைத்தது. ஜனநாயக நாட்டில் கம்யூனிஸ்ட் தலைவராக இருந்து மக்களின் அபிமானத்தைப் பெற்ற ஜோதிபாசு உண்மையிலேயே அபூர்வ பிறவிதான்.
**மயிலாடுதுறை,** **எல்.துர்காதேவி**

✉ சோகமான யதார்த்தத்தின் கீறலை, என் மனக்கண்ணாடியில் விழ வைத்துவிட்டான் 'குஞ்சனின் பெண்சாதி.'
**சாத்தான்குளம்,** **ராதாநேசன்**

✉ கல்லைப் பொடி செய்து மூலிகை ஓவியம் தீட்டிவரும் ஜி.வினோத், ஒரு வித்தியாசமான, கலையை ஜீவிக்க முயற்சி செய்து உணர்வை வித்திட்டு வருவது எங்களுக்கு வியப்பான அனுபவம்.
**திருவண்ணாமலை,** **ஆர்.ஆர்.சாமி**

✉ "எடை போடுகிறார்கள்" பகுதியில் எம்.எஸ்.உதயமூர்த்தியின் கருத்தைப் படித்தபோது ஜெர்மனியில் நாஜிகளைப் பற்றி ஒரு ஜெர்மானியக் கவிஞன் எழுதிய வரிகள் கவனத்துக்கு வந்தன :

தொழிலாளர்களைத் தாக்கினார்கள். நம்மைத் தாக்கவில்லையே என்று மௌனமாக இருந்தேன். அடுத்து பத்திரிகையாளர்களைத் தாக்கினார்கள். பத்திரிகையாளர்களைத்தானே தாக்குகிறார்கள் என்று மௌனமாக இருந்தேன். அடுத்து கம்யூனிஸ்டுகளைத் தாக்கினார்கள். கம்யூனிஸ்டுகளைத்தானே தாக்குகிறார்கள் என்று மௌனமாக இருந்தேன். கடைசியில் என்னையே தாக்கினார்கள். இப்போது உதவிக்குத் தொழிலாளர்கள், பத்திரிகையாளர்கள், கம்யூனிஸ்டுகள் யாரும் இல்லை. அந்தோ!"

- ஆர்.எஸ்.எஸின் அபாயத்தைக் குறைத்து மதிப்பிடக் கூடாது என்பதே என் கருத்து.
**வேலூர்,** **கே.ஏ.சுந்தரவேலு**

# கிரிக்கெட் ஊழல் வழக்குகள்

● ஜி. ராமதாஸ், கணபதி அக்ரஹாரம்.

**? விடுதலைப் புலி ஆதரவாளரான நெடுமாறனை வீரப்பனிடம் தூது அனுப்புவதில் தவறில்லை என்று மத்திய அமைச்சர் வெங்கய்ய நாயுடு கூறுகிறாரே?**

! நெடுமாறன் என்ன... ராஜ்குமாரின் விடுதலையை உறுதிசெய்யக்கூடிய யாரை வேண்டுமானாலும் அனுப்பியிருக்கலாம். ராஜ்குமார் விடுதலைதான் முக்கியம் என்கிற நிலைமையில் அதைச் சாதிக்கவும் முடிந்திருப்பது எதிர்த்தவர்களுக்குச் சரியான பதில்.

● முகவை முத்துசாமி, தொண்டி.

**? 'எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் திருட்டு, ஊழல்னு அரசியல்வாதிகளைத் திட்டறோமே – அவன் எங்கேயிருந்து வர்றான்? நமக்குள்ளேயிருந்துதானே? இந்தக் கூட்டத்திலிருந்து வர்றவன் திருடனாத்தானே இருக்க முடியும்?' – இப்படி கமல் பேட்டியளித்திருப்பதைப் படித்தீர்களா?**

! இன்றும் நூற்றுக்குத் தொண்ணூறு சதம் மக்கள் நல்லவர்களே. மக்களை வழிநடத்த வேண்டிய பொறுப்பில் இருப்பவர்கள் முன்னுதாரணமாகத் திகழ வேண்டும். அப்படி நடந்து கொள்ளாதவர்கள் 'உல்டா' பண்ணித்தான் பேசுவார்கள். மக்களால்தான் சினிமாவின் தரம் குறைந்து போகிறது என்று சொல்பவர்கள்தானே இவர்கள்!

● மு. இராமசாமி, வயலூர்.

**? 'இசை, நாடகம் மாதிரி மருத்துவம் ஒரு கலைதான். எனவே டாக்டர்களுக்கும் கலைமாமணி விருது கொடுக்கப்பட வேண்டும்' என்று குழந்தைநல மருத்துவர் டாக்டர் ஜே. விஸ்வநாத் கூறியுள்ளாரே?**

! இசைக்கு மருத்துவ குணம் உண்டு; இசை, நடனத்தில் விஞ்ஞானரீதியான நுணுக்கங்கள் உண்டு. அதனால் கலைஞர்கள் எம்.பி.பி.எஸ். பட்டம், என்ஜினீயரிங் பட்டம் தரும்படி கேட்கலாம்!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி – 20.

**? பங்களாதேஷ் அணியைக் குறைத்து மதிப்பிடக்கூடாது என்று கங்குலி கூறியுள்ளாரே?**

! அவர் வாய்க்குச் சர்க்கரை போடும்படியாக அல்லவா முதல் டெஸ்டின் முதல் இன்னிங்ஸில் ஆடியது பங்களாதேஷ்! தோற்றாலும் மறக்க முடியாத முதல் இன்னிங்ஸ்.

● எம்.டி. ரவிகாந்த், காஞ்சிபுரம். ●

**? வாக்காளர் பட்டியலில் பெயர் சேர்ப்பதற்காக நடைபெறும் சிறப்பு முகாம் நடத்த தமிழக அரசு இரண்டு தினங்கள் விடுமுறை அறிவித்துள்ளது குறித்து...?**

! வாக்காளராகப் பதிவுசெய்து கொள்வது வாக்காளர்களின் கடமை. அதற்கு எதற்கு விடுமுறை? பல ஜனநாயக நாடுகளில் தேர்தல் தினத்தன்றே விடுமுறை கிடையாது. எதற்கெடுத்தாலும் விடுமுறை, அதை விட்டால் ஸ்டிரைக்; ஆபீசுக்கு வந்தாலும் அரட்டை! இந்த நாடு எப்போது, எப்படி உருப்படும்?

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

**? பா.ஜ.க. தேர்தல் சின்னமான தாமரையைத் தடைசெய்ய குமரி அனந்தன் கோரிக்கை விடுத்துள்ளாரே?**

! தேசியக் கொடியையே தங்கள் கொடியாக வைத்துக் கொண்டு ஏமாற்றும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த ஒருவர், தேசிய மலர் பி.ஜே.பி. சின்னமாக இருப்பது தவறு என்று கூறுவது... physician heal thyself!

● டீ.வி. கோபாலன், சென்னை – 24.

**? காப்பி அடித்தாலும் ஒழுங்காக அழகாகச் செய்ய வேண்டாமா? 'கோடீஸ்வரன்' சன் டீ.வி.க்குப் பெருமையா...?**

! கான மயிலாட வான்கோழியும் தோகை விரித்த கதையாகத்தான் இருக்கிறது.

● தேவந்தி துரைராஜ், திருவண்ணாமலை. ❑

**? கிரிக்கெட் ஊழல் வழக்குகள் நியாயமாக நடக்குமா?**

! வழக்குப் போட முடியாது என்று மத்திய



• வீர உரை!

• வேண்டும் நடவடிக்கை!



• தவறான வாதம்!



• கசப்பான வெற்றி!



• துல்லியமான கணக்கு!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் : தேவந்தி துரைராஜ், 73/29, சட்டநாய்க்கன் தெரு, திருவண்ணாமலை - 606 601.

• ரூ. 25 பரிசு பெறுபவர் : எம். டி. ரவிகாந்த், 49/1, தும்பவனம் தெரு, காஞ்சிபுரம் - 631 501.

# நியாயமாய் நடக்குமா?

அரசின் சட்ட அமைச்சகம் கூறி விட்டது. மேட்ச், வேண்டுமென்றே கோட்டை விடப் பட்டது என்று நிரூபிப்பது அசாத்தியமாம்! கிரிக்கெட் கன்ட்ரோல் போர்டு நடவடிக்கை எடுத்தால்தான் உண்டு. வருமான வரி இலாகாவும் முடுக்கிவிடப்படலாம். வழக்கு, தண்டனை இருக்கட்டும்; மக்களுக்கு வண்டவாளம் தெரிந்து விட்டதல்லவா? அவமானம் இல்லையோ? ஆனால் இன்றுதான் எல்லோரும் எருமைத் தோல்களாக மாறி விட்டார்களே! ஸ்போர்ட்ஸ்... ஃபைனான்ஸ்... பாலிடிக்ஸ்.

● சி. மகேஷ், சென்னை – 26.

*? ஜார்கண்ட் மாநிலம் பிறக்கும் முன் முதல்வர் பதவிக்கு அடிதடி பற்றி...?*

! பிரசவ வேதனை தீர்ந்து தாயும் சேயும் சௌக்கியமாக இருக்கட்டும் என்று இப்போதைக்கு வாழ்த்தி வைப்போம். அப்புறம் பார்க்கலாம்.

● ஆர். தங்கராஜ், திருப்பூர்.

*? வானத்தின் கவிதை விண்மீன்கள் என்றால் வையத்தின் கவிதை என்ன சார்...?*

! கணக்கற்ற கவிதைகளை அடையாளம் காணும் மனித மனம்.

● கே.வி. ராமன், சென்னை - 73.

*? தென் ஆப்பிரிக்காவில் மூன்று கறுப்பு இனத்தவர்களைக் காவல் துறையினர் நாய்களை ஏவிக் கொடுமைப்படுத்தியதற்காக வழக்கு தொடுக்கப்பட்டிருக்கிறதே?*

! அருவருப்பும் பயங்கரமும் மிக்க அந்தக் காட்சியை அப்படியே வீடியோ பிடித்து, செய்தி என்கிற போர்வையில் சின்னத் திரையில் அங்குலம் அங்குலமாகக் காண்பித்த தென் ஆப்பிரிக்க சானல்கள் பேரிலும் நம்மூர் சானல்கள் பேரிலும் யார் என்ன வழக்குத் தொடுக்கப் போகிறார்கள்!

● கே.ஆர். வேலுச்சாமி, அன்னூர்.

*? 'ஜிதேந்திர பிரசாதாவை வாபஸ் பெற வற்புறுத்த மாட்டேன்' என்று கூறியுள்ளாரே சோனியா காந்தி?*

! ஜெயித்துக் காட்டி விட்டார் சோனியா. ஆனால் உளறலின்றியும் ஜிதேந்திரா மீது வெறுப்பை வெளிப்படுத்தாமலுமே மிகச் சுலபமாக சாதித்திருக்கலாம். அப்படிச் செய்திருந்தால் அவரது பெருமை உயர்ந்திருக்கும். இப்போது ஜெயித்தும் கூட கசப்புணர்வு.

● வசந்தாகாந்த், கருப்பம்புலம்.

*? கிரிக்கெட் சூதாட்டம் முற்றிலும் ஒழிக்கப்படும் என்கிறாரே உமாபாரதி?*

! உமாபாரதி கிரிக்கெட்டில் சூதாட்ட ஊழலை ஒழிக்கட்டும்; அவரைக் கட்டியணைத்து அமைச்சரவைக்கு வரவேற்ற சுஷ்மா சுவராஜ், புதிதாக முளைத்துள்ள டெலிகாஸ்ட் ஊழல்களை ஒழிக்கப் பாடுபடட்டும். தப்பு செய்தவர்கள் மீது தாட்சண்யமின்றி நடவடிக்கை எடுக்கட்டும்.



• கோணல் கோரிக்கை!



• சரியான முடிவு



• தாமரை தாக்குதல்!

# அக்னிசர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பிள்ளையார்பட்டி பிள்ளையார் உங்க சைடுல இருக்கறதால உங்க மதிப்பும் அந்தஸ்த்தும் உயரும்; பராக்கிரமம் வெளிப்படும்; பயணத்தால அனுகூலம் உண்டு; பெண்கள் உற்சாகமா வாங்க; வாகனம் வாங்கற வாய்ப்புகூட இருக்கு; அரசியல்வாதிகளுக்கு மட்டும் தான் பிரச்னையான வாரமுங்க; பத்திரிகையாளர்களுக்கும் டிட்டோ!



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசிரிஷம் 2-ம் பாதம் வரை)*

திருத்தணி முருகன் உங்களைப் பாராட்டு மழைல நனைக்கப் போறான் (சாதா மழையைத்தான் காணுமே?) ஆனா செலவும் கட்டுக் கடங்காமத்தானிருக்கும்; சிக்கன வாழ்வு சிக்கலைத் தவிர்க்கும்; பக்தியானவங்களுக்குப் பெரிய மஹான்கள் தரிசனம் கூடக் கிடைக்கலாம்!



**மிதுனம் :** *(மிருகசிரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

கருமாரியம்மன் கால்ல விழுந்துடுங்க; அவளாலதான் உங்களை வீண் அலைச்சல், பணவிரயம், விபத்துகள்லருந்து காப்பாத்த முடியும். லைஃப் பார்ட்னர், பிசினஸ் பார்ட்னர் ரெண்டு பேர் மேலயும் கவனம் செலுத்த வேண்டி வரும். கண்டிப்பா 'அம்மா'வை (அட சொந்த அம்மாங்க) நல்லா கவனிச்சுக்கணும்!



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

ஆஞ்சநேயர் உங்களைத் தூக்கி விடறாரா, எல்லா போட்டி பந்தயங்கள்லயும் எதிர்ப்பை வென்று வெற்றி வாகை சூடுவீங்க, துணிச்சலும் தன்னம்பிக்கையும் அதிகரிக்கும்; ஸ்வீட்டாப் பேசி எல்லோரையும் வளைச்சிடுவீங்க; ஆனா வீணா செலவழிக்காதிங்க, பெண்கள்கிட்ட உஷாரா இருங்க!



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

ராகவேந்திரர் இந்த ராசிப் பெண்களின் நிலையை உயர்த்தப் போறார்; சினிமா, நாட்டியம், சங்கீதம் போன்ற துறைகள்ல இருக்கறவங்களுக்குப் புது சான்ஸ் நிறைய கிடைக்கும்; ஆன்மீகவாதிகளுக்கும் செழிப்பான வாரம்; லாட்டரி டிக்கெட் வாங்கியிருக்கீங்களா? ஜாக்பாட் நிச்சயம்; அப்பா உடம்பை மட்டும் கொஞ்சம் கவனிச்சுக்குங்க.

## நடக்குமென்பார்,



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

சத்ய சாயி அருளாலே அப்பப்ப வர்றத் தடங்கல்கள் எல்லாம் நீங்கி ஃபைனலா வெற்றி அடைஞ்சுடுவீங்க; ஆனாலும் மின்சாரம், நெருப்பு சம்பந்தமான விஷயங்கள் கிட்டப் போகாதீங்க; உடம்பையும் அலட்சியப்படுத்தாதீங்க. பெண்களுக்கு அனுகூலமான வாரம்தான். புனிதப் பணிகளில் பங்கு கொள்றது நல்லதுங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

ஷீரடி சாய்பாபாவைப் போல நீங்க எல்லோரையும் வசீகரிக்கப் போறீங்க; எதிர்ப்புகள்

லாம் மறைஞ்சுடும்; அதிர்ஷ்டம் உங்க வீட்டுக் கதவைத் தட்டி 'ஹலோ'ன்னும், காந்தி கணக்குல போட்டிருந்த கடனெல்லாம் வசூலாகும்; ஆனா வம்புச் சண்டைக்குப் போகாதீங்க... பர்ஸ் அம்போவாகிடும் ஜாக்ரதை!



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

பணக்காரரான திருப்பதி சாமி உங்களை அருள் பார்வை பாக்கறாரே! நிலம், வீடு, வாகனம், கடன் வசூல், போட்டியில வெற்றின்னு ஒரே கபிட்ச சூழ்நிலையில தத்தளிக்கப் போறீங்க; அதுனால முன்ன பின்ன தெரியாதவங்ககிட்ட பழகாதீங்க; உறவினர்களாலும் செலவு ஏற்படும்; அப்பா உடம்பைக் கவனிக்கத் தவறாதீங்க.

# நடக்கும்!



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடப் முதல் பாதம் வரை)*

சிந்தனையாளர்கள், பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள், கலைத்துறையைச் சேர்ந்தவர்கள் எல்லோருக்கும் பாராட்டையும் புகழையும் அம்மன் அள்ளித் தரப் போறா. வேலையில்லாதவங்களுக்கு வேலையும், வேலையிருக்கிறவங்களுக்குப் பதவி உயர்வும் கிடைக்கப் போகுது! செலவுகூட தானம் தருமம்னுதான் செய்வீங்க!



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

காமாட்சியம்மன் உங்களை நல்லாவே கவனிச்சுக்கறாங்க, உங்க திறமை, அறிவாற்றல், நிர்வாகம், பதவி எல்லாமே பளிச்சிடப் போகுது; பயணத்தாலும் பயனுண்டு; தோல், ரசாயனம் இதுங்களை ஏற்றுமதி இறக்குமதி செஞ்சீங்கன்னா நல்ல லாபம் வரும்; ஆனா கைப் பொருள் பத்திரம்!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

அபிராமியின் பாதத்தைக் கெட்டியாப் பிடிச்சுக்குங்க; மின்சாரம், இயந்திரம், நெருப்பு, வெடிப் பொருள்கள் முதலானவற்றால் மட்டுமில்லீங்க, உடன் பிறந்தவங்களாலயே சங்கடங்கள் வரலாம்! அதிர்ஷ்டத்துக்கு சான்ஸே இல்லை; கடினமான உழைப்புதான் ஓரளவு உயர்வைத் தரும்; ரியல் எஸ்டேட் காரங்களுக்கு நேரமே சரியில்லை!



**கடக ராசிக்காரரான கீதா பென்னட்டுக்கு இந்த வாரம் எதிலும் வெற்றி தானாம்.**



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

மாதா புவனேஸ்வரி உங்களுக்கு இந்த வாரம் அளவான வளர்ச்சியைக் குடுக்கறா; பொருளாதாரம் சீரா இருக்கும்; போட்டி பந்தயங்கள்லயும் அளவான வெற்றி தான். அலைச்சலைத் தவிர்க்க முடியாது; அதனால உஷ்ண சம்பந்தமான நோய்களையும், டாக்டர் செலவையும் தவிர்க்க முடியாது!

# பாடாய்ப் படுத்தும் ஃப்ளோரிடா!

விவாதங்கள். தேர்ந்தெடுப்புகள். சிரிப்புகள். தவறுகள். எண்ணிக்கைகள். மறு எண்ணிக்கைகள். இன்னும் கொஞ்சம் தவறுகள். மீடியா, மீடியா, மீடியா. குழப்பங்கள். வக்கீல்கள். உலகில் வேறெந்த நாட்டில் இம்மாதிரியான தேர்தல் சாத்தியமாக முடியும்?

நவம்பர் 7, இரவு 8 மணி தொலைக்காட்சி அறிக்கை: ஃப்ளோரிடா மாநிலத்தில் கோர் வெற்றி.

இரவு 9.55 தொலைக்காட்சி அறிக்கை: ஃப்ளோரிடாவில் கோர் வெற்றி உறுதியில்லை.

நவம்பர் 8, அதிகாலை 2.15 தொலைக்காட்சி அறிக்கை: ஃப்ளோரிடாவில் புஷ் வெற்றி.

அதிகாலை 2.30 கோர்– புஷ்ஷை வாழ்த்துகிறார்; தாம் தேர்தலை விட்டுக் கொடுப்பதாக அறிவிக்கப் போவதாகச் சொல்கிறார்: புஷ், "நீங்கள் ஒரு நல்ல மனிதர்" என்றவாறு கோரின் குடும்பத்துக்குத் தம் வாழ்த்துகளைத் தெரிவிக்கிறார்.

அதிகாலை 3.45 கோர்– புஷ் தொலைபேசி அழைப்பு: இண்டர்நெட் செய்தி அடிப்படையில், வாக்கு எண்ணிக்கை வித்தியாசம் சிறியது என்று தெரிய வந்ததால், தாம் தேர்தலை விட்டுக் கொடுக்கப் போவதில்லை என்று புஷ்ஷிடம் கோர் தெரிவிக்கிறார். முதலில் இதை நம்ப மறுக்கும் புஷ், இறுதியில் "மிஸ்டர் வைஸ்-ப்ரெஸிடெண்ட், நீங்கள் செய்ய வேண்டியதைச் செய்யுங்கள்" என்று சொல்லித் தொலைபேசியைக் கீழே வைக்கிறார்.

• அல்கோர்

நவம்பர் 8-ஆம் தேதி கண்விழித்த அமெரிக்க மக்கள் தாங்கள் இன்னும் ஓர் அதிபரைத் தேர்ந்தெடுக்கவில்லை என்று தெரிந்து கொள்கிறார்கள். புஷ்ஷுக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பிய உலகத் தலைவர்கள் அவற்றைத் திரும்பப் பெறுகிறார்கள். சுமார் எழுபது சட்ட நிபுணர்கள் அடங்கிய குழுவொன்று கோரின் சார்பில் ஃப்ளோரிடாவில் வந்து இறங்குகிறது. 'நியூயார்க் டைம்ஸ்' தினசரிப் பத்திரிக்கை அச்சை நிறுத்திச் செய்தியைத் திருத்துகிறது. எங்களூரின் 'வர்ஜினியன் பைலட்' போன்ற பத்திரிகைகள் 'புஷ் மயிரிழையில்' போன்ற தலைப்புச் செய்தியுடன் வெளிவருகின்றன; இந்தத் தவறான தலைப்புடைய பத்திரிகைகளை இன்று இருபது மடங்கு விலைக்கு விற்கலாம் என்ற உற்சாக வதந்தி பள்ளிக் குழந்தைகளிடையே நிலவுகிறது! (எங்கள் பெண் அன்றைய செய்தித் தாளைப் பத்திரமாகப் பூட்டி வைத்திருக்கிறாள்.)

ஆனால் ஒன்று. தெருக்களில் இராணுவ பீரங்கிகளோ கண்ணீர்ப் புகையோ இல்லை. மக்கள் கூட்டங்கள் பொங்கியெழுந்து ஆர்ப்பாட்டம் செய்யவில்லை. டாலரின் மதிப்பு கீழே விழுந்துவிடவில்லை. மக்கள் அலுவலகத்துக்கும் பள்ளிக்கும் வழக்கம் போல் சென்றார்கள். சிறிது குழப்பத்தைத் தவிர வேறெந்த உணர்வும் புலப்பட

• புஷ்



மூலம் அதிபரைத் தேர்ந்தெடுக்கும் கற்கால வழக்கத்தைத் தொலைத்துக் கட்ட வேண்டுமென்று (புத்தம் புது நியூயார்க் செனெட்டர்) ஹிலாரி கிளின்டனிலிருந்து பலரும் குரல் கொடுக்கின்றனர். எலெக்டோரல் காலேஜ் என்னும் அமைப்பு பல அமெரிக்கர்களுக்கே புரியாதவொன்று என்பதால், அனைத்துப் பத்திரிகைகளும் அதற்கான 'திடீர் கோனார் உரை' போட்டு, மக்களின் பொதுஅறிவை வளர்க்கின்றன. வாக்கெடுப்புக்காகப் பயன்படுத்தப் படும் கருவிகளும் முறைகளும் கற்காலத்தவை என்பதை இப்போது ஒப்புக் கொள்ள வேண்டியது அவசியமாகிறது. வாக்குச் சீட்டை மேலே உயர்த்தி, இப்படியும் அப்படியுமாகத் திருப்பி, அதில் 'பன்ச்' எங்கு, எப்படி – ஆகவே, யாருக்கு வாக்கு விழுந்திருக்கிறது என்பதை மறுபரிசீலனையாளர்கள் தீர்மானிப்பதை மாலைத் தொலைக்காட்சி செய்திகளில் பார்க்கையில் கணிப்பொறி யுகம் கண் முன்னால் கரைந்து போனது போலிருக்கிறது. சம்பந்தப்பட்ட அனைத்துத் தவறுகளையும், (தன் தவறு உட்பட) பல்வேறு கேள்விகளையும், கோணங்களையும் அலசிக் கொண்டிருக்கும் மீடியா, அமெரிக்க அரசமைப்பின் நான்காவது கிளையோ என்ற சந்தேகமும் ஏற்படுகிறது. (Executive – அதிபர், Legislative – சட்டசபை, Judiciary – உயர்நீதிமன்றம் ஆகியவை அரசு சாசனத்தால் உருவாக்கப்பட்ட அரசமைப்பின் மூன்று கிளைகள். இம்மூன்று கிளைகளும் ஒன்றையொன்று கண்காணிக்கும் 'checks & balances' அமைப்புதான் அமெரிக்க அரசாங்கம்.

வில்லை.

பல்கலைக் கழகப் பேரா சிரியர்கள், கலைஞர்கள், எழுத்தாளர்கள் முதலியோர் கொண்ட குழுவொன்று உருவாகி, ஃப்ளோரிடா தேர்தலை மீண்டும் முழுமையாக நடத்துவதே சரியான ஜனநாயக வழிமுறை என்று 'நியூயார்க் டைம்ஸ்' முழுப்பக்க விளம்பரம் மூலம் தினம் குரலெழுப்பி வருகிறது. மக்கள் வாக்குகள் மூலம் நேரடியாகத் தேர்ந் தெடுக்காமல் பிரதிநிதித்துவ எலெக்டோரல் காலேஜ்

**நா**ற்பத்து மூன்றாவது அமெரிக்க அதிபரின் இருக்கை சற்றே மங்கித்தான் தெரிகிறது. கோர் குழு இந்தத் தேர்தலை நீதிமன்றத்தில் முடிவு செய்யப் போவதாய் மிரட்டியது... புஷ் குழு ஃப்ளோரிடா வாக்குகளைக் கையால் எண்ணுவதை நிறுத்த நீதிமன்றத்திடம் தடையுத்தரவு வாங்க முயன்றது... இதற்கும் முன்பே சில ஆழமான கேள்விகள். மறு எண்ணிக்கைக்குப் பின் கோர் அதிபர் என்றால், புஷ் ஆதரவாளர்கள் அதைச் சந்தேகக் கண்ணோடுதான் பார்ப்பார்கள். புஷ் அதிபர் என்றாலோ, மக்கள் வாக்கின்படி இல்லாமல் எலெக்டோரல் காலேஜ் வாக்குகளால் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டவர் என்றாகும். அமெரிக்க சரித்திரத்தில் முதல் முறையாக ஒரு நீதிபதி இந்தத் தேர்தலின் முடிவைத் தீர்மானித்தால், இருவருக்குமே வெற்றியில்லை என்றுதான் கொள்ள முடியும். அப்படியே யாராவது ஒருவர் அதிபராக ஆன பின்னும், இரு கட்சிகளும் சரிசமமாகப் பிரதிநிதித்துவம் பெற்ற சட்டசபைகளைச் சந்திக்க நேரிடும் என்பது

அமெரிக்காவிலிருந்து காஞ்சனா தாமோதரன்



''நான் அனுப்பறதை எந்த பத்திரிக்கையும் வேண்டாம்னு நிராகரிக்காது...''

''அப்படி என்ன அனுப்புவே... ஜோக்கா, கதையா?''

''ஒரு வருட சந்தாதான்...''

— ராஜி ராதா

இப்போதே தெரிகிறது. எனவே, யார் அதிபராக ஆனாலும், கட்சி சார்பற்ற நடுநிலைப் பாதையில்தான் நடக்க வேண்டிய நிலைமை ஏற்படும். சமூகப் பிரச்னைகளை இடதுசாரி, வலதுசாரி என்று எளிமையாக்குவது பொருத்தமற்றது. எனவே அதை அடிப்படையாகக் கொண்ட இருதுருவக் கட்சி அரசியல் என்பதும் அர்த்தமற்றது என்று அமெரிக்க மக்கள் தங்கள் வாக்குப்பதிவின் மூலம் சொல்ல முயன்றிருக்கிறார்களோ? யோசித்துப் பார்க்க வேண்டிய விஷயம்தான்.

நிச்சயமின்மை நிரம்பிய நேரம் இது. ஆனால், மக்களிடையே ஒருவிதமான அமைதி நிலவுகிறது. யார் அதிபராக வருகிறார்கள். பொறுத்திருந்து பார்ப்போம் என்கிற மன நிலை. அரசு சாசன அமைப்பு தரும் பாதுகாப்பும், மக்களின் மனவுறுதியும் சேர்ந்து இந்த மனநிலையை விளைவிக்கலாமோ என்னமோ? எல்லாச் சமுதாயங்களையும்போல் போட்டியும் சுயநலமும் இருந்தாலும், இத்தருணத்தில் தன்னையறியாமலே ஒன்றுபட்டு நிற்கிறது இந்த அமெரிக்க தேசம். எனவே நிச்சயமின்மையை எதிர்கொண்டு, தன்னம்பிக்கையுடன் முன்னகர முடிகிறது.

**நன்றி: 'நியூயார்க் டைம்ஸ்', 'டைம்', 'வாஷிங்டன் போஸ்ட்', வர்ஜினியன் பைலட்', சி.என்.என், ஏ.பி.சி, சி.பி.எஸ், என்.பி.சி தொலைக்காட்சிகள்.**

# கல்கி - ரமணி Vs ரமணி

## இணைந்து வழங்கும்



# 'தம்பதி தமாஷ்'

தீபாவளி
பரிசுப் போட்டி
முடிவுகள் அடுத்த இதழில்

# சத்ய சாயி பாபாவின் மகிமை

இந்தக் கல்கி இதழ் சத்ய சாயி பாபாவின் ஸ்பெஷல் என்று சொல்லவே இலவசமாக ஒருவர் அணிய வேண்டிய இரத்தினத்தை ஆலோசனை வழங்கும் மிஸ்டிக்ஸ் உரிமையாளர் திருமதி வித்யா அவர்கள் எங்களிடம் பல பாபாவின் அற்புதங்களைப் பற்றி கூறி இந்தக் கடிதத்தைக் காட்டினார்.

**என் பெற்றோர்களின் தவத்தினால் எங்கள் குடும்பத்தில் 35 வருடங்களுக்குப் பிறகு நான் பிறந்தேன். பெண் வாரிசு என்ற குறை இல்லாமல் ஒரு ராணியைப் போல் நான் வாழ்ந்தேன். என்னுடைய பதினைந்து வயதில் தாய் மாமனை திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று கட்டாயப்படுத்தினார்கள். திரும்ப வாரிசு இல்லாமல் போய்விடுமோ என்ற அச்சத்தினால் வேண்டாம் என்று கூறியும், எல்லோருடைய கட்டாயத்தினால் நாலு வருடத்திற்குப் பிறகு தாய் மாமனையே கட்டிக் கொண்டேன். எனக்கு இரு குழந்தைகள் பிறந்தன. நல்ல படிப்பும், பண்பாடும் உள்ள குழந்தைகளாக இருந்தனர். அவருடைய தொழிற் முன்னேற்றத் தினால் எங்கள் குடும்பத்தில் குழப்பங்கள் தொடர்ந் தன. அவர் பல தீய பழக்கங்களுக்கு அடிமையாகி அதை விடமுடியாமல் அதுதான் முன்னேற்றத்திற்கு காரணம் என்று கூறினார்.**

**கடந்த 6 வருடத்திற்கு குடும்ப பொறுப்பு இல்லாமல் என்னை வீட்டை விட்டு விரட்டுதல், அடி, உதை இதைத் தவிர்த்து வேறு ஒன்றும் நடந்ததில்லை. இதைப் பார்த்துக் கொண்டு இருந்த குழந்தைகளும் என்னை மதிக்காமல் என்னைப் புழு போல் நடத்தினார்கள். குழந்தைகளிடம் கூறவும் வழியில்லை.**

**"நரகம் வேறு எங்கும் இல்லை பூலோகத்தில் அதுவும் என் வீட்டில் தான் என்ற நிலையில் இருக்கும்போது திருமதி வித்யாவை சந்திக்கப் போனேன். முன் பதிவு இல்லாமல் சென்று அங்கு பஜனைகளை கேட்டுக் கொண்டு உட்கார்ந்து இருந்தேன். சாய் பாபாவின் படங்களை பல தடவை பார்த்திருந்த பொழுதும், முதன் முறையாக இவர் கடையில் உள்ள படம் பேசுகிறது போல் இருந்தது. என் பிரச்சனைகள் எல்லாம் தீர்ந்தது போல் உணர்ந்தேன்.**

**அவர்கள் ஆலோசனைப்படி மோதிரத்தை அணிந்தேன். ஒரு வாரத்திற்குள் என் கணவர் அவருடைய தீய பழக்கங்களைவிட்டு விட்டு பழைய படி குடும்ப பொறுப்புகளை ஏற்றுக் கொண்டார் எப்படி? இந்த திடீர் மாற்றம்? சத்ய சாயி பாபா அவரது கனவில் தோன்றி அவருடைய தீய பழக்கங்களை விடக் கூறி சத்தியம் பெற்றார். அந்தக் கனவு கனவாக தோன்றவில்லை. தன்னையே அடக்க முடியாமல் அழுது அவர் கூறிய வார்த்தைகள் "எனக்கு அவர் மீது நம்பிக்கை இல்லாதபோதும் எனது குடும்ப நலன் கருதி சத்தியம் வாங்கியது தெய்வம்தான். நான் இந்த தெய்வத்தை மதிக்கவில்லை என்றால் என் பிறப்புக்கு அர்த்தம் இல்லை என்று சொன்னார்.**

ரத்தினங்கள் இயல்பாக தெய்வீகத் தன்மையும், Life energy force கொண்டவை. இதை சரியாக அணிவதினால் நன்மை மட்டுமே ஏற்படும். சுவாமியின் கிருபையாலும், கருணையாலும் நான் கொடுக்கும் ரத்தினங்களுக்கு மிகுந்த சக்தி உள்ளன.



"மிஸ்டிக்ஸ்"

**"த வோர்லட் ஆப் ஜெம்ஸ்"**

**கடை எண்.19, தமிழ்நாடு ஹவுஸிங் போர்டு காம்பிளெக்ஸ், லஸ் பிள்ளையார் கோயில் பின்புறம், மைலாப்பூர், சென்னை - 4. போன் : 4985854**

ADVT

# பளிச்சென்று மின்னிய அழுக்கு வேட்டி!

லாஸ்ட் வீக் எந்த பேப்பரைத் திறந்தாலும் ஃபுல் பேஜ்ல முகத்துல அறையற மஞ்ச. 'கலர் அட்வர்டைஸ்மென்ட்' – கே. பாலசந்தரின் சின்னத் திரைக்காக.

நிலவும் வானும் போல, மலரும் மணமும் போல, தேனும் சுவையும் போல அரசியலும் ஊழலும் போல சீரியலும் ஜவ்வும் இணை பிரியாம செட் ஆயிடும்ன்ற ஒரு அபாய மான காலகட்டத்துல டைம்லி இன்டர் வென்ஷன் சின்னத்திரையோட இந்தப் பெரிய முயற்சி. ரொம்ப ரொம்ப ப்ரொபஷ னலான தயாரிப்புன்றது மட்டுமில்லே. கதை யும் டயலாக்கும் நடிப்பும் காமெராவும் மியூ சிக்கும் மௌனமும் பின்னிப் பிணைஞ்சு – 'அழுக்கு வேட்டி' ஜோரான பவானி ஜமக் காளம் மாதிரி கனம், கலர், குவாலிடி... ஓகே! இதுக்கு மேல் பாராட்டினா அடுத்த சீரியல்ல நடிக்கறதுக்காக சான்ஸ் கேட்டு ஐஸ் வைக்க றேன்னுவீங்க. பாராட்டு மழை இதோட ஸ்டாப்!

அதிருக்கட்டும்! நிஜ மழை காலை வாரிடுச்சு... தருமமிகு சென்னைவாசிகள் தண்ணிக்கு என்ன பண்ணப் போறதா பிளான் வைச்சிருக்கீங்க? ஏன்னா கவர் மென்ட் பிளான்லாம் பைசாக்குப் பிரயோ ஜனமில்லே! எத்தனை பேர் உழைச்ச சம்பா திச்ச காசுல தண்ணி வாங்கறாங்கன்றதப் பார்க்கறோமே. இரண்டு வாரம் முன்னாடி எங்க பாட்டிக்குச் சுண்ணாம்பு வாங்க ஒரு சின்ன மளிகை கடைக்குப் போனேன். ஒரு நாளைக்குக் குறைஞ்சது ஹன்ட்ரட் கேன்ஸ் மினரல் வாட்டர் விக்கறதாச் சொன்னார் கடைக்காரர்.



• பவானி ஜமக்காளம்!

தண்ணி சேமிக்க எங்க பாட்டி சொல்ற டிப்ஸ்: பல் தேய்க்க, ஃபேஸ் வாஷ் பண்ண குழாயைத் திறக்காம குவ ளையிலே தண்ணி எடுத்து யூஸ் பண்ணுங்க.

குளிக்கும் போதும் பக் கெட்ல தண்ணி பிடிச்சு வைச்சுக்கிட்டு முடிஞ்சா முக்கால் பக்கெட்ல மானேஜ் பண்ணுங்க. (முடியாட்டி முக்காலே அரைக்கால்!)

காய்கறி வாஷ் பண்ற தண்ணி, அரிசி கழுவுற தண்ணி, கிச்சன் 'சிங்க்'ல கை கழுவும் போது விழற தண்ணி எல்லாம் கலெக்ட் பண்ணி வைச்சு ஓவர்நைட் பாத்திரங்களை ஊற வைக்க யூஸ் பண்ணுங்க. காலைல பாத்திரம் கழுவ செலவாகிற தண்ணி அளவு கணிசமா குறையும்.

துணி துவைச்ச பிறகு அலசுற தண்ணியை டாய்லெட் ஃப்ளஷ்களுக்கு யூஸ் பண்ணலாம்.

இப்படியெல்லாம் யார் அவஸ்தைப்படற துன்னு அலுத்துக்கறீங்களா... ரைட்! அடுத்த மழை வரைக்கும் ஏதாவது தண்ணியில்லாத காட்டுக்கு டிரான்ஸ்ஃபர் கேட்டு வாங்கிக் குங்க. மெட்ரோ சிட்டியில இருந்துக்கிட்டு தண்ணிக்குத் தவிக்க வேண்டியிருக்கேன்ற



• போர்வெல் போட்டாலும் வேஸ்ட்!

வயித்தெரிச்சலாவது மிச்ச மாகும்.

சித்தர்களின் பேருல கம், சித்தர்கள் கண்ட இறைமைன்ற புக்ஸ் பத்தி எழுதிட்டு பதிப்பகம் அட்ரஸ் குடுக்கலை யேன்னு நேம், அட்ரஸ் இல்லாம கையெழுத்து மட்டும் போட்டு எடிட்டருக்கு லெட்டர் வந்திருக்காம்! அந்த புக்ஸை பப்ளிஷ் பண்ணியிருக்கற 'குறிஞ்சி' விலாசம்: 20ஏ, ஆசிரியர் சங்கக் குடியிருப்பு, இராஜாஜி நகர் விரிவு, வில்லிவாக்கம், சென்னை – 49.

லாஸ்ட் த்ரீ வீக்ஸா நான் எத்தனை இங் கிலீஷ் வொர்ட்ஸ் யூஸ் பண்றேன்னு எண்ணி கணக்கெழுதி அனுப்பிச்சிருக்கற புதூர் க. முருகையனுக்குத் தாங்க்ஸ் சொல்லி முடிச்சுக்கறேன். மிஸ்டர் கொடுவேரி கூட இந்த எஃபர்ட்டை எடுத்துக்கலை!

— சுமி

# KALKI SHOPPING PAGE




# அழைக்கிறது அமெரிக்கா!

# கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

## குவிஸ் போட்டி—3

முதல் இரண்டு குவிஸ் கூப்பன்களிலுள்ள கேள்விகளுக்குப் பதில் கண்டு பிடித்தாயிற்றா? வந்துவிட்டது மூன்றாவது கூப்பன்.

முதலிரு வார விடைகளை நீங்கள் சரியாகக் கண்டுபிடித்திருந்தால், ஒவ்வொரு போட்டியிலும் விடைகளுக்கிடையே ஓர் ஒற்றுமை இருப்பதைக் கவனித்திருப்பீர்கள். இந்த வாரமும் அப்படியே!

எங்கே, கூப்பனைப் பூர்த்தி செய்யுங்கள் பார்க்கலாம்! பின்னர் முதலிரு கூப்பன்களுடன் பத்திரப்படுத்துங்கள். 26 வார இறுதியில் எல்லாவற்றையும் சேர்த்து, நாங்கள் குறிப்பிடும் கடைசித் தேதிக்கு முன்னர் அனுப்பி வைக்க வேண்டும்.

மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான விடைகள் எழுதும் நபருக்கு அமெரிக்கப் பயணம் பரிசு!

ஐரோப்பா பயணம்— இரண்டாம் பரிசு

மலேசியா—சிங்கப்பூர் பயணம் — மூன்றாம் பரிசு.

மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதிவிட்டால், பரிசு, குலுக்கல் முறையில் தீர்மானிக்கப்படும். பயணப் பரிசு பெறாதோருக்குப் புத்தகங்கள்— அமரர் கல்கியுடையவை — பரிசாக வரும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

### குவிஸ் கூப்பன்—3

1) ஜேசுதாஸ் பாடிய முதல் தமிழ்ப் படம் எது?
2) திருமாலின் கடைசி அவதாரம் என்று எதைக் கூறுவார்கள்?
3) 'திருமுருகாற்றுப்படை'யை எழுதியவர் யார்?
4) ராமனின் எந்த நகையை அனுமன் அசோக வனத்திலிருந்த சீதைக்குக் காண்பித்தான்?
5) மணிமேகலைக்குக் கிடைத்த அட்சய பாத்திரத்தின் பெயர் என்ன?
6) கண்களைக் கட்டியபடி உள்ள நீதிதேவதையின் கையில் உள்ள பொருள் எது?

**விடைகள்:**

1)..........................................
2)..........................................
3)..........................................
4)..........................................
5)..........................................
6)..........................................



# சீனு

**பா**சம் வழிந்தோடும் சீனுவின் இசைக் குடும்பத்தை மலையாள டச்சுடன் அறிமுகப்படுத்தும் இயக்குநருக்கு, கொஞ்ச நேரத்தில் தமிழ் ஃபார்முலா ஜுரம் தொற்றிக் கொண்டு விடுகிறது.

அண்ணன் கேசவன் பிரபல பாடகர். ஒரு கச்சேரியில் தடுமாறும் அண்ணனுக்காகப் பாடப் போய், ஓவர் நைட் பாப்புலராகி விடுகிறார் தம்பி சீனு.

அண்ணன் மீது உயிரையே வைத்திருக்கும் தம்பியிடம், கச்சேரிக்கு டேட்ஸ் கேட்டு ஆட்கள் வர, தனது இடம் பறிபோய் விட்டதாக மனக்குள் புழுங்கும் அண்ணன் கேசவனின் ஈகோ ஒரு கட்டத்தில் வெளிப்படையாக வெடிக்கிறது.

அதன்பிறகு அக்மார்க் செயற்கைத் திருப்பங்களில் சிக்கிக் கொண்டு திக்குத் தெரியாமல் அலைகிறது திரைக்கதை.

சீனுவாக வரும் கார்த்திக் சில நாடகத்தனமான காட்சிகளில் மட்டுமே மனத்தில் நிற்கிறார். தனது பாசத்தை சந்தேகித்தது கண்டு உடையும்போதும், கல்யாண களை கட்டிய வீட்டில், அண்ணனின் மரணச் செய்தியைச் சொல்ல முடியாமல் மனக்குள் வைத்துக் குமுறுகிற போதும் முத்திரை. நிறைய காட்சிகளில் ஒப்பேற்றல்.

அண்ணாக வரும் வாசுவின் உருவத்திற்குப் பாகவதர் கெட் அப் கச்சிதமாய்ப் பொருந்தியும், நடிப்பில் கோட்டை விட்டுவிட்டார். கத்திக் கத்தி வசனம் பேசும் வாசு, அந்தக் கொடுமையான பாணியைத் துணைக் கதாபாத்திரங்கள்மீதும் திணித்திருப்பது வெளிப்படை.

வாசுவின் மனைவியாக வரும் கலாவதியும், மாளவிகாவும் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்தியிருக்கிறார்கள்.

இசையைக் களமாகக் கொண்ட ஒரு படத்தைத் தேவா பயன்படுத்திக் கொள்ளாதது துயரம்.

படத்தில் ஒரே ஆறுதல் விவேக். மைக்கேல் ஜாக்சன் ஹேர் ஸ்டைல், கையில் கித்தார், கூடவே தனது ஜால்ரா ரெஜிமெண்ட் சகிதம் அடிக்கும் லூட்டிக்குக் க்ளாப்ஸ்.

சாவு வீட்டில் அடிக்கும் பறையை 'டெத் பன்ச்' என்ற பெயரில் கேசட் தயாரித்து வெளியிட, வீட்டுக்கு வீடு பறையொலி! இதற்குப் போனசாக, விவேக் முதுகில் போலீஸ் பறை வாசிக்கிறபோது விலா நோகிறது.

மலையாளத்தில் வெளுத்து வாங்கிய 'பரதம்' தமிழில் சீனுவாக நொண்டியடிக்கிறது.

**— விஷுவல்தாசன்**



# 1500 ஆண்டு அமைதி சாதனை!

ராஜீவ் காந்தி படுகொலைக்குப் பிறகு தலைமறைவாக இருந்து வரும் விடுதலைப் புலிகள் தலைவர் பிரபாகரனை நார்வே அமைதிக்குழு நேருக்நேர் சந்தித்து உலகின் கவனத்தை ஈர்த்துள்ளது.

"உலகில் எங்கே பிரச்னை இருக்கிறதோ அங்கே கட்டாயம் ஒரு நார்வே குடிமகனை அமைதியின் தூதனாகப் பார்க்க முடியும்" என்கிறார் நார்விஜியின் நோபல் இன்ஸ்டிடியூட்டின் இயக்குனர் கிர் லன் டெஸ்டட். கடல் கடந்து கண்டம் கடந்து தூதுவர்களை அனுப்பும் நார்வே நாட்டிற்கு உலக அமைதியின் மீது அப்படியென்ன அக்கறை.

முதல் இரண்டு உலகப் போர்களின் களமாக விளங்கிய ஐரோப்பாவில்தான் நார்வே, ஸ்வீடன், டென்மார்க் ஆகிய மூன்று ஸ்கேண்டிநேவியன் நாடுகளும் இருக்கின்றன. இரத்தம், அழிவு, கலாசார சீரழிவு இவற்றை உலக யுத்தத்தின் விளைவுகளாகக் கண்கூடாகக் கண்டு, அனுபவித்து, அதிலிருந்து பாடம் கற்றுக் கொண்ட நாடுகள் இவை. ஹிட்லரின் பாசிச பயங்கரத்தைப் பக்கத்திலிருந்து பார்த்தவர்கள். எனவேதான் பிரிவினைவாதம், உள்நாட்டு யுத்தம், எல்லைப் பிரச்னை, மதமோதல்கள் என எங்கெல்லாம் பிரச்னை வெடிக்கிறதோ அங்கே அமைதித் தூதுவர்களை அனுப்புகிறது நார்வே. ஸ்வீடன் அகில உலக அணு ஆயுத ஒழிப்பில் முழுக்கவனத்தையும் செலுத்துகிறது. டென்மார்க் இன்னும் ஒரு படி மேலே சென்று, உள்நாட்டுக் கலவரம், சுற்றுச்சூழலைப் புனர்நிர்மாணம் செய்யப் புறப்பட்டு விடுகிறது.

"பிரச்னைக்குரிய இருதரப்பினரையும் சமாதானம் செய்து, பேச்சுவார்த்தைக்கு அழைக்கும் நார்வே, தீர்வு ஏற்படும்போது உடன்பாடுகள் எதிலும் கையெழுத்து இடுவதில்லை. தன்னை ஒரு facilitator என்றுதான் சொல்லிக் கொள்கிறது. எந்தச் சூழ்நிலையிலும் Negotiater ஆக மாறுவதில்லை.

அமைதியின் மீது நார்வே அதீத காதல் கொள்வதற்கு ஆழமான காரணங்கள் ஏராளம். இலக்கியம், மருத்துவம், ரசாயனம் போன்ற துறைகளுக்கு நோபல் பரிசு வழங்கும் குழு ஸ்வீடனில் செயல்படுகிறது. ஆனால் அமைதிக்கான நோபல் பரிசை முடிவு செய்வது மட்டும் நார்வேயிடம் இருக்கிறது. நார்வீஜியின் நோபல் கமிட்டியின் பரிசுத் தேர்வு இதுவரையிலும் விமர்சிக்கப்பட முடியாத ஒன்றாக இருந்து வந்திருக்கிறது.

ஸ்வீடனின் தலைநகர் ஸ்டாக்ஹோமில் சிப்ரி (Sipri) ஸ்டாக்ஹோம் இன்ஸ்டிடியூட் அஃப் பீஸ் - உலக அமைதியை உருவாக்கும் ஓர் ஒப்பற்ற நிறுவனம். இன்னும் இங்கே ஏராள அமைப்புகள் இதற்காகவே இருபத்து நான்கு மணி நேரமும் இயங்குகின்றன. நார்வேயின் தலைநகர் ஆஸ்லோவிலோ நார்வேயின் நோபல் இன்ஸ்டிடியூட். நார்வேயின் முன்னாள் பிரதமர் திருமதி பிரண்ட்லண்ட், ஐ.நா. அமைதி அமைப்புகளின் தலைவர்.

இத்தனை காரணங்களையும் தாண்டி, நேட்டோ நாடுகளில் அங்கம் வகிக்கும் நார்வே, சுமார் ஆயிரத்து நூறு ஆண்டுகளாக எந்த ஒரு நாட்டையும் துன்புறுத்தியதில்லை என்ற வரலாறே அவர்களைத் தலை நிமிரச் செய்கிறது. சமாதான முயற்சியில் இறங்கும் நார்வேயின் பங்களிப்பை, பிரச்னையுள்ள நாடுகள் இதுவரை உதாசீனம் செய்து, மறுத்ததில்லை.

சேர்ந்துவிடாமல், சகிப்புத் தன்மையோடு அமைதிக்காக வெள்ளைப் புறாவாக பறந்து பறந்து நம்பிக்கையோடு பணி செய்கிறது. நார்வே 'பெரிய சக்தி கொண்ட சிறிய நாடு' என்று ஐநா. செயலர் கோபி அன்னானே பாராட்டுவது என்றால் அத்தனை சுலபமல்லவதானே?

- ஆர்.சி. ஜெயந்தன்



# இனிமேல் ஆரம்பம்

## 5

"அடிச்சா இப்படியொரு 'லாட்' அடிக்கணும்பா... 'குரோர்பதி'. ஹர்ஷவர்த்தனாவும், 'மகாலட்சாதிபதி', தேவி தம்பிதுரையும் இங்க பிச்சை வாங்கணுங்கறேன். ஒரு பொது அறிவு போட்டி உண்டா? 'ஐ க்யூ' டெஸ்ட்தான் உண்டா? அட, இதெல்லாம் ஒண்ணும் வேணாம்பா... முப்பது வருஷமா 'இண்டு'ல வர்ற 'க்ராஸ் வேர்டை' மண்டைய பிச்சுகிட்டு எழுதி அனுப்பறேன். ஒரு பைசா வந்ததில்லை. ஆனா ஒரு பார்வை, ஒரு வெட்டு, ஒரு துள்ளல், ஒரு சின்ன சிரிப்பு போதுமே... ஒரு கோடியில்ல, நாலஞ்சு கோடிக்கு அதிபதி ஆயிட்டா..."

– *சீனுவாச ராகவனின் வாயிலிருந்து வெந்நீர் கெட்டில் மாதிரி 'கபகப'வென புகை வந்தது.*

அவர் தன் மைத்துனரோடு அஜய்யின் வீட்டுக்குப் போய் ஈஸ்வரன் தம்பதியைப் பார்த்துவிட்டு வந்ததையும், அவர்கள் ஏற்கெனவே அஜய் தனக்குப் பிடித்தமானவளைத் தேர்ந்தெடுத்துவிட்டதாகச் சொன்னதையும் இரண்டு நாட்களுக்கு முன்பே அலுவலகத்தில் ஒலிபரப்பிவிட்டார்.

இதனால் ஆபீஸே ஒருவிதமான மப்பும், மந்தாரமுமான சூழ்நிலையில் இருந்தது.

ப்ரீதியை ஏதோ ஒருவித நப்பாசையில் மனசுக்குள் வைத்து பூப்போட்டுக் கொண்டிருந்த வாலிபர்கள் இரண்டு நாட்களாக ஷேவ்கூட செய்யாமல் தேவதாஸ் கணக்கில் அலைந்து கொண்டிருந்தார்கள். உஷாவிடமிருந்து உன்னிமேரி வரையில் வயது வித்தியாசமில்லாமல் எல்லா பெண்களுக்கும் வயிற்றில் மிளகாயை அரைத்துப் பூசினாற் போன்றதொரு எரிச்சல்.

"நல்லவேளை... இவளை என் தம்பிக்குப் பார்க்கலாம்னு இருந்தேன். சீனுசார் சொன்னதிலிருந்து ஒண்ணு தெரிஞ்சுகண்டேன். நடுத்தர குடும்பத்து மருமகள்களுக்கு இத்தனை அழகே வேண்டாம். என்ன சொல்றே உன்னிமேரி?"

– பிரபாவதி என்கிற இன்னொரு சாஃப்ட்வேர் அனலிஸ்ட் மத்தியானம் லஞ்ச் டயத்தில் சோறுகூட இறங்காமல் புலம்பித்



தீர்த்தான். இவன் ப்ரீதியை எப்படியும் தன் தம்பிக்கே முடித்துவிடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தவள். இதற்காகவே ஸ்பெஷலாக, ப்ரீதிக்கென்று மாவடு, புளிக்காய்ச்சல் எல்லாம் கொண்டு வருவாள்...

அடிக்கடி தன் தம்பியின் அழகையும், உயரத்தையும், நகைச்சுவை உணர்வையும் ப்ரீதியின் காதுபட சொல்லிக் கொண்டே இருப்பாள். இப்பொது காற்றுப்போன பலூன்மாதிரி ஆகிவிட்டாள்.

வழக்கம்போல துரைசாமி, சீனுவாசராகவனுக்கு மறுப்பு தெரிவிக்காமலில்லை.

''என்யா... பையனுக்குப் பொண்ணு பார்த்து முடிச்சாச்சுன்னா, அது இவதான்னு சொல்லிட முடியுமா? அத்தை பொண்ணு, மாமா பொண்ணு இப்படி உறவுல இருக்கக் கூடாதா? எதுக்கு சொல்றேன்னா, எத்தனைதான் அழகு, அறிவு எல்லாம் இருந்தாலும் அந்தஸ்து ஒண்ணு இடிக்குதே.... நாலஞ்சு கோடிக்கு சொந்தமானவர் தன் பொண்ணை ஐம்பது கோடி பையனுக்குக் கல்யாணம் செஞ்சு வச்சாரே... அதுவே பெரிய விஷயம். இங்கே இந்தப் பொண்ணோட அப்பாவுக்குச் சொந்தமா வீடு இருக்கு... ஒரு பழைய மாடல் ஹெரால்டுகார் வச்சிருக்காரு.''

...இழுத்தார் துரைசாமி. சீனுவாசராகவன் நக்கலாகச் சொன்னார்.

''தெரியும்பா... நைன்டீன் ஸிக்ஸ்டி ஃபோர் மாடல். பேக்டோர் கிடையாது... ஃபிரண்ட் சீட்டை மடக்கிட்டுதான் உள்ள

**அனுராதா ரமணன்**

ஏறணும். டிரைவர் சீட்டு கதவு அப்பப்போ திறந்துக்கும். மனுஷன் ஒரு கையால கார் கதவையும், இன்னொரு கையால ஸ்டியரிங் கையும் பிடிச்சுட்டுதான் ஓட்டுவாரு... அதான் பிரதோஷம் தவறாம கபாலி கோவில்ல பார்க்கறேனே..."

இவர்களது புகைச்சல்களுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல இருந்தது நேற்று மீனாட்சி ஆபீசுக்கு வந்ததும், ப்ரீதியுடன் ஒன்றாகச் சேர்ந்து வெளியே கிளம்பினதும்...

வருங்கால மருமகளுடன் அந்த அம்மாள் துணிக்கடைக்கோ, நகைக்கடைக்கோ போவதாக அலுவலக வட்டாரத்தில் அவசரச் செய்தி பரவியது.

இன்றைக்குப் ப்ரீதி கொஞ்சம் விசேஷமான அலங்காரத்தில் ஜொலித்தாள். ரோஜாநிற சுடிதார், ஊட்டித்தோட்டமே நகர்வது போல காட்சி அளித்தது. தனது வழக்கமான இருப்பிடத்தில் உட்காராமல் தொலைபேசிப் பக்கத்திலேயே அமர்ந்து யார்யாருக்கோ கட்டளையிட்டுக் கொண்டிருந்தது வேறு இவர்களின் கவனத்தை ஈர்ப்பதாய்...

"ஹலோ! நளபாகம் நடராஜய்யர்தானே? நமஸ்காரம் சார்! அப்பா சொல்லியிருப்பார்னு நினைக்கிறேன்... உங்களோட ஸ்பெஷல் அயிட்டமான காசி அல்வா அவசியம் வேணும் சார். அப்படியே பாதாம்கீர்... ரஸமலாயா... ரெண்டுல ஏதோ ஒண்ணு. கரெக்டா எட்டுமணிக்கு டின்னர் ரெடியா இருந்தாப் போதும்... உங்ககிட்ட ஒப்படைச்சேன்ல... இனிமே நான் நிம்மதியா இருப்பேன்..."

"கபாலி பூக்கடையா? கபாலி இருக்காரா? நீங்கதான் பேசறீங்களா? வணக்கங்க... பொண்ணைக் கல்யாணம் பண்ணி கொடுத்திங்களே... நல்லா இருக்காங்களா... ஒரு ஜோடி அதிக கனமில்லாத மல்லிப்பூ மாலை, ஒரு பூமாலை கிராண்டா... தவிர ஃப்ளவர் பொக்கே... வர்றவங்களுக்கு ரோஸ் எல்லாம் அப்பா சொல்லி இருப்பாரே..."

"ஹலோ, அப்பா நான் ப்ரீதி பேசறேன்... எல்லா அரேன்ஜ்மெண்ட்டும் ஒழுங்கா நடந்துண்டிருக்கா... ஆபீஸை விட்டு கிளம்பறதுக்கு முன்னாடி ஒரு தடவை ஃபோன் பண்றேன்... டென்ஷனே வேண்டாம்... எதெல்லாம் சாத்தியமோ அதை மட்டும் பண்ணுங்கோ... உங்க காஸ்ட்யூம் ஜிப்பா, அங்கவஸ்திரம்தான். சும்மா ரேமாண்ட்ஸ் மாடல் மாதிரி மாடர்னா வந்து அசத்த வேண்டாம்.... வயசுக்குத் தகுந்த மாதிரி நடந்துக்கோங்கோ...."

இப்படி பம்பரமாய்ச் சுழன்றபடி, தொலைபேசியில் பேசியபடி, கம்ப்யூட்டரையும் செல்லமாய் இரண்டு தட்டு தட்டியபடி வளையவந்தவளை சீனுவாசராகவன் அடக்கமாட்டாத ஆதங்கத்துடன் கேட்டார்...

"ஏம்மா, பொண் பார்க்கற வைபவமா, இல்லை நிச்சயதார்த்தமேவா?"

இதற்கு அவள் பதிலளிக்குமுன் உன்னி மேரி கிண்டலாய்ச் சொன்னாள்.

"பொண்ணை எப்பவோ பார்த்து முடிச்சாச்சு... எப்பவோ நிச்சயமும் பண்ணியாச்சு... அடுத்தாப்பல கல்யாணம்தான்... நமக்கெல்லாம் ஒரு டீயும், பிஸ்கட்டுமாவது உண்டா, இல்லையானு கேளுங்க..."

ப்ரீதி புன்முறுவலுடன் எதற்கும் பதிலளிக்காது, சரசரவென அஜீத்தின் அறைக்குள்...

அவனோ அதுநேரம் வரையில் அவளைக் காணாத பரபரப்பில் இருந்தான்.

"எங்கே போயிட்டே ப்ரீதி? இன்னிக்கு முழுக்க உன்னை நான் பார்க்கலை..."

"ஸாரி.... கொஞ்சம் அவசரவேலையா வெளில..." அவள் முடிக்கவில்லை; அவன் குறுக்கிட்டான்.

"அம்மாவும், அப்பாவும் சாயந்திரம் கபாலீஸ்வரரர் கோவிலுக்குப் போகப் போறதா ஃபோன் பண்ணினாங்க... உன்னையும் அழைச்சிட்டு கோவிலுக்கு வரச் சொல்லி அம்மா அழுத்தி சொல்லியிருக்கா..."

"என்னையா?"

ப்ரீதி, ஒரு கணம் தயங்கினாள். முதல் நாள் மீனாட்சியுடன் வெளியில் போனதற்கே ஆபீஸில் உள்ளவர்கள் மனம் போனபடி பேசுகிறார்கள்... இன்று அஜய்யுடன் சேர்ந்து வெளியே போனால்... அவ்வளவுதான்...






RCS



பாபா 75

இரண்டு புறங்களிலும் தபலா. முன்புறம் கிடார், வீணை என்று மெகா சைஸ் இசைக்கருவிகள் முகப்பில் கொண்ட இசை மண்டபம் ஒன்று புட்டபர்த்தியில் கட்டப்பட்டுள்ளது. முழுவதும் சலவைக்கல் இழைத்திருக்கிறார்கள். வட்ட வடிவில்



அமைக்கப்பட்டுள்ள இந்த மண்டபம் விரைவில் துவக்கப்படவுள்ள இசைக் கல்லூரியின் ஓர் அங்கம்.

— எம்

அவள் முகம் குப்பென சிவக்க, அவள் மனத்தில் ஓடும் எண்ணங்கள் எதையுமே அறியாத அஜய், குழந்தைத்தனமாகக் கூறினான்.

"இன்னிக்கு நீ ரொம்ப அழகாயிருக்கே... எங்க அம்மா பார்த்தா – ஏதுடா நமக்கொரு போட்டின்னு நினைப்பா..."

ப்ரீதி களுக்கென சிரித்தாள்.

"அதெப்படி... உங்கம்மா வயசென்ன... என் வயசென்ன? உங்க அம்மா தெய்வீகமான அழகு. எம்.எஸ். சுப்புலட்சுமி மாதிரி..."

"அடேயப்பா, இதை எங்க அம்மாக்கிட்ட சொல்லிடாதே.. உச்சிக் குளிர்ந்து போயிடும் அவங்களுக்கு..."

இப்படிச் சொன்னவன், திடீரென நினைத்துக் கொண்டாற்போல கேட்டான்...

"ஆமா, நேத்திக்கு அம்மாவும், நீயும் கடைக்குப் போனீங்களே... அப்பாவுக்கு என்ன கிஃப்ட் வாங்கினீங்க..."

"மூச்!"

ப்ரீதி தனது இதழ்களின்மீது ஆள்காட்டி விரலைப் பதித்து, தலையை அசைக்க...

"அதையெல்லாம் இப்ப சொல்லக் கூடாது... கோவிலுக்குப் போயிட்டு, வீட்டுக்குத்தானே போகப் போறீங்க... அப்ப தெரிஞ்சுட்டுப் போறது..."

"சே... இந்தப் பொம்பளைங்களே சுத்த மோசம்.... நேத்திக்குதான் அறிமுகப்படுத்தி வச்சேன். இருபத்து நாலுமணி நேரத்துக்குள்ள ரெண்டுபேருமா சேர்ந்து தனிக் கட்சியே ஆரம்பிச்சுட்டீங்க..."

ப்ரீதி புன்னகை செய்தாள்.

அவள் கையில் சிறிய அட்டைப் பெட்டி ஒன்றைக் கொடுத்தாள். அவன் வியப்புடன் அவளை நிமிர்ந்து பார்த்தான்.

"இதென்னது?"

"இது உங்க அப்பாவோட பிறந்த நாளுக்கு நீங்க கொடுக்கற பரிசு."

"பார்த்தியா, மறந்தே போயிட்டேன். இதுக்குத்தான் ப்ரீதி வேணுங்கறது... ஆமா இதுக்குள்ளயாவது என்ன இருக்குன்னு நான் தெரிஞ்சுக்கலாமா...?"

அவன் கெஞ்சும் குரலில் கேட்க அவள் மர்மமாய்ச் சிரித்தாள்.

"சஸ்பென்ஸ்... கண்டிப்பா உங்க அப்பாவுக்குப் பிடிச்சதுதான் அதுல இருக்கு."

"எங்க அப்பாவோட இத்தனை வருஷமா இருக்கேன். எனக்கே அவருக்கு என்ன பிடிக்கும்னு தெரியாது. நீ அவரை இன்னும் பார்த்ததுகூட இல்லை... அதெப்படி?"

"ஏன்? நேத்து உங்க அம்மாவைப் பார்த்தேன் இல்ல... ஒத்துமையான தம்பதிகள்ல ஒருத்தரைப் பார்த்தா போதும்... அடுத்தவங்களோட சுபாவம், ரசனை எல்லாமே தெரிஞ்சுடும்..."

அவள் சொல்ல, அவனது விழிகள் மேலும் விரிந்தன.

"நெஜமாவே உன்னுடைய புத்திசாலித்தனத்தைப் பார்த்தா ரொம்ப பொறாமையா இருக்கு..."

அவன் பெருமூச்சு விட்டபடி கிளம்ப... அவள் அவசரமாய்த் தொலைபேசியில் அப்பாவை அழைத்துச் சொன்னாள்.

"அப்பா, அஜய்கூட நானும் கோவிலுக்குப் போறேன். அங்கே அவர் அப்பா அம்மாவும் வந்திருப்பாங்க... அர்ச்சனை முடிந்து திரும்பறதுக்கு ஒரு மணி நேரம் ஆகும். அதுக்குள்ள எல்லாம் ரெடியாயிடுமில்ல...? மிஸ்டர் ஈஸ்வரனோட ஃப்ரெண்ட்ஸ் ஃபோன் நம்பர் எல்லாம் சரியாயிருந்ததா?"

"ஆஹா..."

கேதாரியின் குரலில் தொனித்தது சந்தோஷமா? திருப்தியா? என்பதற்கு ஒருபட்டிமன்றமே நடத்தலாம்.

(தொடரும்)



• மருத்துவமனை




# பணம் வேண்டாம், நோய் இருக்கிறதா?

உடம்பு சரியில்லை என்று ஆஸ்பத்திரிக்குப் போனால், முதலில் இத்தனை ஆயிரம் பணம் கட்டுங்கள் என்று கெடுபிடி பண்ணுவதுதானே வழக்கம்? "நோயாளிகள், நோயை மட்டும் கொண்டு வந்தால் போதும், ஒரு ரூபாய் கூட பணம் தேவையில்லை" என்று சொல்கிறார்கள். புட்டபர்த்தியில் உள்ள சத்ய சாய் மருத்துவமனையில். இது லேட்டஸ்ட் தொழில்நுட்பக் கருவிகள் அனைத்தும் கொண்ட ஒரு சூப்பர் ஸ்பெஷாலிடி ஆஸ்பத்திரி.

புட்டபர்த்தியில், ஒரு பொது மருத்துவமனை இருந்த போதும், பெரிய அறுவைச் சிகிச்சை உள்ளிட்டவற்றை வசதி இல்லாதவர்களுக்கு இலவசமாகச் செய்யும் இலட்சியத்துடன், இந்த சூப்பர் ஸ்பெஷாலிடி ஆஸ்பத்திரி 1991ல் பாபாவின் அறுபத்து ஆறாவது பிறந்த நாளன்று ஆரம்பிக்கப்பட்டது. இதய சிகிச்சைப் பிரிவு, சிறுநீரக சிகிச்சைப் பிரிவு, கண் சிகிச்சைப் பிரிவு என்று மூன்று பகுதிகள் இங்கு செயல்பட்டு வருகின்றன.



• உள்ளே ஒரு ஹாலில்

தினமும் ஒவ்வொரு பிரிவிலும், நூற்றைம்பது புறநோயாளிகள் வருகிறார்கள். அவர்களுக்குத் தேவையான பல்வேறு








• மருத்துவமனையில் பிரார்த்தனை மண்டபம்

பரிசோதனைகளும் செய்யப்பட்டு, என்ன விதமான சிகிச்சை அவசியம் எனத் தீர்மானிக்கப்படுகிறது. சிறுநீரகம் மற்றும் கண் சிகிச்சைப் பிரிவில், பரிசோதனைகள் முடிந்ததும், உடனடியாக ஆபரேஷன் நடத்தி விட முடியும். ஆனால், இதய சிகிச்சைப் பிரிவில்தான் நீளமான வெயிட்டிங் லிஸ்ட். முதலில் வருபவர்க்கு, முதலில் சிகிச்சை என்கிற பாலிசி இங்கே கடைபிடிக்கப்படுகிறது. இதன் காரணமாக, ஓப்பன் ஹார்ட் சர்ஜரி முதலியவற்றுக்காக, நோயாளிகள் நான்கு வருடங்கள் வரை காத்திருக்க வேண்டிய கட்டாயம்.

ஆனால், இதிலும் ஆச்சரியங்கள் நிகழாமல் இல்லை. ஜார்ஜ் மெல்கே கோழிக்கோட்டுக்காரர். இதயத்தில் இரண்டு வால்வுகள் பழுதடைந்து, அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டிய கட்டாயம். ஆனால் இரண்டு, மூன்று லட்சம் செலவு செய்து ஆபரேஷன் செய்து கொள்ள வசதி இல்லை. கோழிக்கோடு சாயி சமிதி நண்பர்கள் சொன்ன ஆலோசனையின் பேரில், புட்டபர்த்தி வந்தார். பரிசோதனைகளை முடித்த டாக்டர்கள் 'உங்கள் முறை வந்து, ஆப்ரேஷன் செய்ய நான்கு ஆண்டுகள் ஆகும்' என்று சொல்லி விட்டார்கள்.

"நான்காண்டுகள் நான் உயிர் பிழைத்திருப்பேனா?'' என்று டாக்டர்களைக் கேட்டேன். "உங்கள் பிரச்னை புரிகிறது. ஆனால், முதலில் வருகிறவருக்கு முதலில் சிகிச்சை' என்பதே இங்கே கடைபிடிக்கும் கொள்கை என்பதால், உங்களைப் போன்ற பலரும் ஆண்டுக்கணக்கில் காத்திருக்க வேண்டியிருக்கிறது. உங்களுக்காக வருத்தப் படலாம்; பிரார்த்தனை செய்யலாமே தவிர வேறு ஒன்றும் செய்வதற்கில்லை" என்று டாக்டர்கள் கூறி விட்டனர்.

சோகமாக, அன்று பிரசாந்தி நிலையத்துக்குப் போய் பஜன் மண்டபத்தில் அமர்ந்திருந்தேன். பாபா நடந்து வந்து கொண்டிருந்தார். என் அருகே வந்தவுடன் கடகடவென மலையாளத்தில், ''எனக்கு இதயத்தில் பிரச்னை. ஆபரேஷனுக்கு நான்கு வருடங்கள் காத்திருக்க வேண்டும் என்கிறார்கள் டாக்டர்கள். நான் அதுவரை உயிரோடு இருக்க மாட்டேன்" என கண்கலங்கினேன். என்னைச் சில விநாடிகள் ஆழமாகப் பார்த்து விட்டு,

"பயப்படாதே! உன் உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லை. எல்லாம் நல்லபடியாக முடிந்து குணமடைந்து விடுவாய்'' என்று மலையாளத்திலேயே சொன்னார் பாபா. நான் ஊருக்குக் கிளம்பிப் போய்விட்டேன். சரியாக இருபதாவது நாள், புட்டபர்த்தியிலிருந்து, உடனே வந்து, ஆபரேஷனுக்காக ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆகும்படி தந்தி வந்தது. வந்தேன். ஆபரேஷன் பாபா அருளால் சக்ஸஸ். ஐந்து வருடங்கள் ஓடி விட்டன. நான் வருடந்தோறும் இரண்டு வாரம் இங்கே வந்து தங்கி என்னைக் காப்பாற்றிய ஆஸ்பத்திரிலேயே சேவை செய்கிறேன். என் மகன் கூட புட்டபர்த்தி கல்லூரியில்தான் படிக்கிறான்'' என்று நெஞ்சம் நெகிழக் கூறினார் ஜார்ஜ்.

ஆஸ்பத்திரியை ஒரு வலம் வந்த போது, ஆச்சரியம் மேலிட்டது. சுத்தம் என்றால் அப்படி ஒரு அக்மார்க் சுத்தம். அதே நேரம் ஆஸ்பத்திரிக்கே உரிய மருந்து வாடையும் இல்லை. விசாலமான வராண்டா, அகலமான படிகள். பாபாவின் படங்களுடன், லயித்துப் போக வைக்கும் இயற்கை காட்சிகள்.

ஆஸ்பத்திரியே 'ஓம்' என்ற சமஸ்கிருத எழுத்தின் வடிவில்தான் வடிவமைக்கப்பட்டிருக்கிறது. நுழைந்ததும் கலைநயத்துடன் வடிவமைக்கப்பட்ட பிரார்த்தனை மண்டபம். நடுநாயகமாக அலங்கார விநாயகர். டாக்டர்கள் கூட தினமும் ஆஸ்பத்திரிக்கு வந்தவுடன், இங்கே பிரார்த்தனையை முடித்துவிட்டுத்தான் தங்கள் பணியை ஆரம்பிக்கிறார்கள்.

— மானஸா

படங்கள்: யோகா

கல்யாணபுரம் ஆராவமுதன்

# ஸ்ரீராமபக்த ஹனுமான்

மரத்திலேயிருந்து கீழே இறங்கிய ஹனுமானைக் கண்டு சீதை முதலில் பயந்தாள். அடுத்தகணமே தலைமேல் கைகூப்பி, சீதையை வணங்கினான் ஹனுமான். வணங்கியபடியே அவளைப் பார்த்துக் கேட்டான் :

"தாயே! தாமரை இதழ் போன்ற உன் கண்களிலிருந்து அருவி போல் கண்ணீர் பெருகக் காரணம் என்ன? யார் குலம் நாசமாவதற்காக இப்படிப் பதிவ்ரதையான உனது கண்ணிலிருந்து நீர் பெருகுகிறது? நீ யார் அம்மா? தேவ கன்னிகையா? ராக்ஷஸியா? கந்தர்வப் பெண்ணா...?"

என்ன வேடிக்கை பாருங்கள்! ஹனுமானைப் பார்த்து அரக்கனா? குரங்கா? தேவனா? என்று சீதை குழம்பினாள் அல்லவா? இப்போது ஹனுமான் அதே போல் குழப்பத்தில் கேட்கிறான்.

ராமகாதையானது பரமாத்மாவின் மானிட அவதாரக் கதை என்பதால் எல்லா பாத்திரங்களும் மானுடப் பண்புகளுடனேயே இயங்குவதைப் பார்க்கிறோம். எல்லோருக்குள்ளேயும் தெய்வீகத் தன்மை இருக்கிறது. ஆனால் மனித இயல்புகளான சந்தேகமும் பயமும் அவற்றைச் சற்றே மூடி மறைக்கின்றன. பின்னர் தெய்வீகப் பண்பு அஞ்ஞானத்தை வெல்கிறது.

ஹனுமான் சொல்கிறான்:

"ஒருவேளை, கோபத்தினால் அல்லது அறியாமையால் கணவர் வசிஷ்டரைப் பிரிந்து வந்துவிட்ட பத்தினி அருந்ததியோ நீ? உனது லக்ஷணங்களைப் பார்க்கும்போது ஒரு மகாராஜாவின் பட்டத்து மனைவி போல் தோன்றுகிறதே? அப்படியானால் நீ வருத்தத்தில் ஏன் இருக்கிறாய்? ஒருக்கால் நீ ஸ்ரீராமனின் தர்மபத்னியான சீதை என்றால் – ராவணனால் அபகரிக்கப்பட்டு இங்கே கொண்டுவரப்பட்டவள் என்றால்- உன்னைப் பற்றி மேலும் அறிய விரும்புகிறேன் அம்மா. எனக்கென்னவோ உன்னைப் பார்த்தால் சீதையாகத்தான் தோன்றுகிறது. உனக்கு நலம் உண்டாகட்டும் தாயே..." என்று தானே கேள்விகள் கேட்டு, தானே பதிலும் சொல்லி விடுகிறான் ஹனுமான்!

ஒரு அன்னியப் பெண்ணைப் பார்த்த மாத்திரத்தில் உரிமையோடு பேச ஆரம்பித்து விட்டதால், அவள் துயரைத் துடைப்பதற்குதவக்கூடிய இதமான கேள்விகளைக் கேட்டு ஆரம்பிக்கிறான். உடனே சீதைக்கு நம்பிக்கை பிறக்கிறது. தன்னுடைய விருத்தாந்தங்களையெல்லாம் உள்ளது உள்ளபடி ஹனுமானிடம் சொல்கிறாள். ராவணன் தனக்கு இரண்டு மாத கெடு வைத்திருப்பதைத் தெரிவிக்கிறாள். அதற்குள் தான் உயிரை மாய்த்துக் கொள்ள முடிவு செய்து விட்டதையும் கூறுகிறாள்.

ஹனுமான் பதறிப் போய் பேசுகிறான். "தேவி! நான் ராமனது உத்தரவை சிரமேற்கொண்டு அவரது தூதனாக உங்களிடம் வந்துள்ளேன். ஸ்ரீராமன் சுகமாக இருக்கிறார். தனது க்ஷேமத்தை உங்களுக்குத் தெரிவிக்கும்படி சொல்லியனுப்பியிருக்கிறார். லக்ஷ்மணனும் தனது வணக்கத்தைச் சொல்லியனுப்பியிருக்கிறார்."

இதைக் கேட்டு முதலில் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தாள் சீதாபிராட்டி. மறுகணமே, ஹனுமான் ஒருக்கால் ராவணனாகவே இருக்கக்கூடுமோ என்று மீண்டும் சந்தேகம் வர, அவள் உடல் நடுங்குகிறது.




அவள் சந்தேகத்தையும் பயத்தையும் போக்க வேண்டியது தன் கடமை என உணர்ந்து ஹனுமான் பேசுகிறான் :

"தாயே! நான் உண்மையான ராமதூதன்தான். ராமபிரான் தனது தம்பி லக்ஷ்மணனுடன் க்ஷேமமாக இருக்கிறார். உங்களை அபகரித்து வந்த ராவணனை ராமன் வந்து விரைவில் சம்ஹரிப்பார்; உங்களை மீட்பார். இது குறித்து எவ்வித சந்தேகமும் வேண்டாம். நீங் கள் பயப்படு

வதுபோல் நான் ராவணன் அல்ல. குரங்கரசனும் ராமனின் நண்பனுமான சுக்ரீவனின் மந்திரி நான். உங்களைத் தேடிக் கண்டுபிடிக்கவே மிகப் பெரிய சமுத்திரத்தைத் தாண்டி வந்திருக்கிறேன்...''

சீதையின் மனம் ஓரளவு சமாதானம் அடைந்தது. அவள் கேட்கிறாள் :

''வானரனே! நீ ராமனை எப்படி அறிவாய்? குரங்கு அரசனான சுக்ரீவனுக்கும் மனிதனான ராமனுக்கும் எவ்வாறு நட்பு ஏற்பட்டது? ராமனின் அங்க அடையாளம் உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே...? அதையெல்லாம் உள்ளது உள்ளவாறு சொல் பார்க்கலாம்...''

இதைக் கேட்டதும் ஹனுமானுக்குத் தாங்க முடியாத சந்தோஷம் ஏற்பட்டு விட்டதாம்! ஏன் தெரியுமா...? தன் உள்ளத்தில் அனவரதமும் வைத்துத் தியானிக்கும் ராமனின் வடிவழகை வர்ணிக்க ஒரு வாய்ப்புக் கிடைத்ததே! அதுவும் சாக்ஷாத் சீதாபிராட்டியிடம் வர்ணிப்பது என்றால்... பரவசமானான் ஹனுமான். அப்படியே வர்ணனைகளைப் பொழிந்தான் :

''தாமரை இதழொத்த கண்களை உடையவன் ஸ்ரீராமன். மிகுந்த அழகன்! அனைவர் உள்ளங்களையும் கவர்ந்து இழுக்கக்கூடிய ஆகர்ஷணமுடையவன். ஒளியில் சூரியனையும் பொறுமையில் பூமியையும் அறிவில் வேதகுரு பிருஹஸ்பதியையும் நிகர்த்தவன்...'' இப்படியே துளித் துளியாக வர்ணமெடுத்து ஒரு சித்திரம் தீட்டுவது போல் ஸ்ரீராமனின் ஒவ்வொரு குணாதிசயமாக எடுத்துச் சொல்லி கோர்வையாக வர்ணித்து அந்த வடிவழகைக் கண் முன்னே நிறுத்தியிருக்கிறான் ஹனுமான்.

சீதாபிராட்டி ஆனந்தக் கண்ணீர் பெருக இந்த வர்ணனையைக் கேட்கிறாள்.

''ராமன் சிறந்த தர்மங்களை அனுசரிப்பவன்; ஒழுக்கம் மிகுந்தவன்; வில் வித்தையில் அசாத்தியத் தேர்ச்சி பெற்று தன்னிகரில்லாது விளங்குபவன். அவன் தோள்கள் மலை போன்று வலுவானவை. கைகளோ முழங்கால்கள் வரை நீண்டு 'ஆஜானுபாஹு' என்று அவனைப் பறைசாற்றுகின்றன. சங்கு போன்றது அவன் கழுத்து. வலிமை வாய்ந்தது அவன் மார்பு. சிம்ஹத்தைப் போன்று கம்பீர நடையை உடையவன்...'' - இப்படியெல்லாம் வர்ணிக்கிற ஹனுமான், ராமனுக்கும் சுக்ரீவனுக்கும் நட்பு ஏற்பட்ட வரலாற்றையும் சீதாதேவிக்கு மீண்டும் விவரிக்கிறான்.

- இதெல்லாம் வால்மீகி ராமாயணம் காட்டும் காட்சி.

இதையே கம்பரும் சொல்கிறார். ஹனுமானின் ராம வர்ணனையாகக் கம்பர் இரு

## அருள்வாக்கு

'நீ எப்படி விட்டாயோ அப்படி ஆகட்டும்' என்று சரணாகதி செய்வதுதான் பக்தி. தனக்கு என்று எதுவுமே இல்லாவிட்டால் மனசின் அழுக்குகள் நீங்கி, அது கண்ணாடி மாதிரி சுத்தமாக இருக்கும். அப்போது நிறைந்து ஆனந்தமாக இருக்கலாம். 'எனக்கு என்று ஒன்றுமில்லை' என்று யாரிடம் சரணாகதி செய்துவிட்டாலும் - ஒரு பதியிடம் பத்தினி சரணாகதி செய்தாலும் ஒரு குருவிடம் சிஷ்யன் சரணாகதி செய்தாலும் அப்புறம் நிச்சிந்தை தான்; அதன் முடிவான பலனாக மோக்ஷம்தான். ஆனால் ஏதோ புராணங்களில் இப்படிப் பதியிடம், ஆசாரியனிடம் சரணாகதி செய்தே தெய்வமாகி விட்டவர்களைப் பற்றிச் சொல்லியிருந்தாலும், பிரத்தியக்ஷத்தில் இப்படி நம் மாதிரி குற்றம் குறை இருக்கக் கூடிய ஒரு மநுஷ்யனிடம் சரணாகதி பண்ணுவது என்றால் முடியத்தான் இல்லை. இப்படிப்பட்ட வாயக்குள்ளவன் என்று தோன்றுகிற குரு கிடைத்து, அவனிடம் சரணாகதி செய்து விட்டால் அப்புறம் ஸ்வாமி கூட வேண்டாம் தான். ஆனால் வாஸ்தவத்தில், நிஜமாகவே திரிபுவனங்களுக்கும் யஜமானனாக, எல்லாம் தன் சொத்தாகக் கொண்டுள்ள ஸ்வாமி

## வடுவூர் தேரடி ஹனுமான்

தஞ்சை ஜில்லாவில் வடுவூர் என்ற திருத்தலத்தில் உறைகின்ற கோதண்டராமர் மிகவும் பிரசித்தி பெற்றவர். அந்தக் கோயிலைச் சேர்ந்த ஆஞ்சநேயரது ஸந்நிதி தேரடியில் உள்ளது. இவர் 'தேரடி ஹனுமான்' எனப்புகழ் பெற்றவர்.

இவருக்குத் தேங்காய் உடைத்து, பானகம் நிவேதனம் செய்து, அர்ச்சனை செய்து, நிறைவேறாத பல அரிய காரியங்கள் நடைபெறுவது பக்தர்கள் நிதர்சனமாகக் கண்ட உண்மை.



யிடம் தான், நம்மால் கொஞ்சத்தில் கொஞ்சமாவது, 'எல்லாம் உன் உடைமையே, எனக்கென்று ஒன்றுமில்லை' என்று சரணாகதி செய்து, அதனால் நிம்மதி பெற முடிகிறது.

பக்தி செய்வதற்கு இன்னொரு முக்கியமான காரணம் : அன்பு செலுத்தாமல் வாழ்ந்தால் அதில் ஆனந்தமே இல்லை. அன்பிலே உள்ள ஆனந்தம் வேறெதிலும் இல்லை என்று அநுபவத்தில் தெரிகிறது. ஆனால் நாம் யாரிடம் அன்பு வைத்தாலும், என்றோ ஒரு நாள் ஒன்று நாம் அவரைவிட்டுப் பிரிகிறோம்; இல்லாவிட்டால் அவர் நம்மை விட்டுப் பிரிகிறார். ஆனந்த ஹேதுவாக இருந்த அன்பு அத்தனையும் அழுகை மயமாகி விடுகிறது. நம்மைவிட்டுப் பிரியாத ஒரே சாசுவத வஸ்து ஈசுவரன்தான். அவனிடம் அன்பு வைத்துவிட்டால்? இந்த அன்பு என்றும் சாசுவதமாக ஆனந்தம் தந்து கொண்டே இருக்கும். இந்த அன்பு முற்றுகிறபோது யாவுமே அவனாகத் தெரியும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

பது பாசுரங்கள் பாடியிருக்கிறார். அவற்றுள் ஒன்றைப் பாருங்கள் :

*அண்ணல்தன் திருமுகம் கமலம் ஆம் எனின்*
*கண்ணினுக்கு உவமை வேறு யாது காட்டுவேன்?*
*தண்மதி ஆம் என உரைக்கத் தக்கதோ?*
*விண் உடல் பொலிந்து அது மெலிந்து தேயுமால்*

சந்திரனுக்குக் கூட ஒப்பிடக்கூடாது ஸ்ரீராமனை என்பது கம்பனின் கோட்பாடு. ஏனென்றால் சந்திரனுக்குத் தேய்கிற இயல்பு உண்டல்லவா? ஸ்ரீராமன் தேயாத நிலவல்லவா?!

ராமநாடகத்தில் அருணாசலக் கவிராயர் ஒரு பாடல் தருகிறார் : ஹனுமானின் வர்ணனையாக வரும் பாடல்தான்.

*அந்த ராம சௌந்தர்யம் என்னால்*
*அறிந்து சொல்லப் போமோ அம்மா*
*கந்தமேவும் அரவிந்தமலரும் அவர்*
*காலுக்கு நிகர் ஆமோ?*
*கைக்குத்தான் சொல்லப் போமோ?*

தாமரை என்று கையைச் சொல்வதா அல்லது காலைச் சொல்வதா..? வர்ணனைக்கு அப்பாற்பட்ட அழகனாக அல்லவா இருக்கிறான் ஸ்ரீ ராமன்.

கவிராயர் கற்பனை இது விஷயத்தில் அலாதிதான்.

'காலைச் சொல்லவா? கையைச் சொல்லவா, தாமரைக்கு உவமை சொல்லவா...' என்றெல்லாம் பாடிக் கொண்டே போய் ஹனுமான் கடைசியில் சீதையிடம் சொல்கிறானாம்,

*"அவனது அழகு உனக்குத் தெரியும்.*
*வேதம் தனக்குத் தெரியும்!"*

என்று!

இவ்வளவு சொன்ன பிறகு சீதைக்குத் தானாகவே நம்பிக்கை ஏற்பட்டு விடாதா? மகிழ்ச்சி பிறந்து விடுகிறது.

அந்தச் சமயத்தில் ஹனுமான் தனது இரு உள்ளங்கைகளையும் நீட்டி விரித்துக் காண்பிக்கிறான். அவற்றிலே ராம நாமமிட்ட மோதிரம் அழகாக உட்கார்ந்திருக்கிறது!

'பச்ய தேவி அங்குலீயகம்' - 'ராம நாமமிட்ட மோதிரத்தைப் பார்ப்பாயாக' என ஹனுமான் கூறியதாக வால்மீகி ராமாயணத்தில் வருகிறது.

*நெடிய கையால் காட்டினான் ஓர் ஆழி*
*அது வாள் நுதலிகண்டாள்*

என்று கம்பராமாயணம் சொல்கிறது.

ஹனுமான் தன் இரு கரங்களை விரித்து அதில் ஏந்திய அங்குலியகத்தை சீதா தேவி தானே கரம் நீட்டி எடுத்துக் கொண்டாளாம்.

சற்று யோசித்துப் பாருங்கள். 'ஒரு பொருளைக் கொண்டு வந்திருக்கிறேன்' என்று சொல்லி எடுத்து வருபவர்கள் தாங்கள்தான் அதைக் கொடுக்க வேண்டியவரிடம் கொடுப்பார்கள். ஆனால் இங்கே ஹனுமான் கொடுக்கவில்லை; நீட்டுகிறான் - சீதைதான் அதை அவன் கரங்களிலிருந்து எடுத்துக் கொள்கிறாள்.

ஏன்...?

'அகில உலகங்களுக்கும் செல்வங்களை வாரி வழங்கும் தேவியின் கரம் தாழ, தன் கரம் உயர்த்திக் கொடுப்பதாவது! அவள் கரமே என்றும் உயர்ந்தருளும் கரமாக இருக்க வேண்டும்' என்பது ஸ்ரீ ராம பக்த ஹனுமானின் தீர்மானம். அதைத்தான் தனது செய்கையின் மூலம் நிறைவேற்றினான் அஞ்சனை புத்திரன்.

(வளரும்)




# பாபாவின் அமுத மொழிகள்

அடுத்தவர் இன்பத்தில் நாம் மகிழ்ந்து, மற்றவர் துன்பத்தில் நாம் நெகிழ்ந்து, ஏகமாக இருப்பதே இறையருள் பெறும் வழி.

● மனசாட்சிக்குச் செவி சாய்த்தால் நேரான பாதையில் சீராகச் செல்லலாம்.

● தேன் என்று சொன்னால் சுவைக் காது; உண்ண வேண்டும். சேவை என்று சொன்னால் போதாது; செய்ய வேண்டும்.

● டார்ச் விளக்கில் பாட்டரி இருந்தால் தான் ஒளி கிடைக்கும்; உள்ளத்தில் மகிழ்ச்சி இருந்தால்தான் முகம் மலர்ந்து இருக்கும்.

● ஒவ்வொரு முறை மூச்சு விடும் போதும் இறைவனை நினைக்கப் பழகினால், இறுதி மூச்சு விடும் போதும், நினைத்துக் கொண்டே விட முடியும்.

● இல்லாததற்கு ஏங்காமல், உள்ளதைக் கொண்டு உள்ளம் மகிழ்க.

● இறைவன் மந்திரவாதி! அவன் படைத்த மாஞ்செடியே இவ்வுலகம்.

● இன்றைய உலகம் அமைதியை யும், அனுகுண்டையும் விரும்புகிறது. ஆனால் ஒன்று வந்தால் மற்றொன்று ஓடிவிடும்.

● இரும்பு நீருடன் சேர்ந்தால் துருப்பிடிக்கும். நெருப்புடன் சேர்ந் தால் தூய்மையாகும். நாமும் சேருமி டத்திற்கு ஏற்ப மாறுவோம்.

● பெற்ற மக்களை செவிலியர் வளர்த்தால், பெற்றோர் களை யாரென்று பிள்ளைகள் கேட்கும்.

● முதன் முதலில் சந்திர மண்டலத்துக்குப் போக உதவியது தன்னம்பிக்கை என்ற விண்கலமே!

● நெருப்பு வெம்மை யானது; பனிக்கட்டி மென்மை யானது. இரண்டும் ஒன்று சேர்ந்தால் இரண்டுமே அழியும். இனம் அறிந்து நட்பு கொள்ள வேண்டும்.

● இசைத் தட்டுகள் பார்ப்பதற்கு ஒன்றுபோலத் தோன்றினாலும், அவற்றுள் எழும் இசை வெவ்வேறு. அவ்வாறே ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு விதம்.

● ஆயிரம் பருக்கைகளை அள்ளி உண்கிறோம். ஒரு கல் கிடைத்தால், அன் னத்தில் கற்கள்தான் இருக்கிறது என்கிறோம். ஆயிரம் இன்பங்களுக்கிடையே ஒரு துன்பம்வரின் வாழ்க்கையே அவதி என அலட்டிக் கொள்கிறோம்.

தொகுப்பு: மானஸா

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

